# கல்கி

KALKI 10.12.95 ரூ. 3.00

மியூஸிக் ஸ்பெஷல்!

அட்டகாசமாக ஓர்
அரட்டைக் கச்சேரி!

# அசத்தல்... அதைவிட அசத்தல்!

'சிவகீதிமாலா' - நாட்டிய நாடகத்தின் பெயரைக் கேட்டதும் புதுமையாக ஏதேனும் இருக்கும் என்று தோன்றியது.

கடைசியில் பார்த்தால் எல்லாம் வீட்டுக்கு வீடு நடக்கும் கதைதான் - கணவன் மனைவி ஊடல்! கைலாசமே இரண்டுபட்டுப் போகிறது!

பார்வதி கோபித்துக் கொண்டு போய்விட, தோழி அவளைத் துரத்திக் கொண்டு தூது போக, பரமேசுவரனின் மகிமைகளை எடுத்துச் சொல்ல, பின்னர் அவ்ரே வந்து பார்வதியின் தாபம் தணிக்க, அவள் நாணத்தால் தளிர்க் கரங்கள் கொண்டு முகம் மறைக்க.... - கிளைமாக்ஸ் மட்டும் நம் வீடுகளில் காணக் கிடைக்காதது!



இந்த இரண்டு வரிக் கதையை இரண்டு மணி நேர நாட்டிய நாடகமாக வடிவமைப்பதில், சலிப்பூட்டாமல் சாதனை புரிந்திருப்பவர் கிருஷ்ணவேணி லக்ஷ்மணன். ருக்மிணி தேவியிடம் பெற்ற பயிற்சியும் கலாக்ஷேத்ரா அரங்கில் ஆடி ஆடி அதனை அங்குலம் விடாமல் அறிந்து வைத்திருக்கும் அனுபவமும் கை கொடுத்திருக்கின்றன.

சிவகீதிமாலாவை இயற்றியவர் காஞ்சி சங்கர மடத்தின் முன்னாள் பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள். (சமீபத்தில் மறைந்த மகா பெரியவரல்ல.. அவருக்கும் முந்தைய காலத்தவர்.) சமீபத்தில் நடந்த ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகளின் சஷ்டியப்த பூர்த்தியையொட்டி இதனை நாட்டிய நாடகமாக உருவாக்கியது கலாக்ஷேத்ரா.

விறுவிறுப்புக்காக சேர்க்கப்பட்டுள்ள வனவர்ணனைகளும் நிருத்தியக் கோர்வைகளும் அழகாக இழைகின்றனவெனில், இசையமைப்பும் பாட்டும் சிவகீதிமாலாவைத் தூக்கி நிறுத்துகின்றன.

அரங்க அமைப்பும் ஆடைகளும் எப்போதும் போல் கலை நயம் குன்றாமல் பிரகாசிக்கின்றன. ஒளி அமைப்பு அசத்தல்... ஆனால் அதனினும் அசத்தல்..... சிருங்காரம் ததும்பும் சீன்களில் காத்துள்ள மென்மையான கண்ணியம்!

— அலமு

# "உங்கள் விருது யாருக்கு?"

**– இந்த ஆண்டு விருது பெறும் சில இசைக் கலைஞர்களிடம் இக் கேள்வியைக் கேட்டோம்....**

சாந்தா தனஞ்செயன் :

"நான் கொடுக்கும் விருது நடிகை மனோரமாவுக்குத்தான்! அவரைப் போன்ற அசாத்தியத் திறமைசாலியான நடிகையை நான் பார்த்ததில்லை. 'Versatile' என்பார்களே, அதற்கு மனோரமா ஓர் உதாரணம். எந்தப் பாத்திரம் ஏற்றாலும் அதில் தன் முழுமையான ஆற்றலைக் காண்பிக்கும் அற்புதமான நடிகை. எந்தச் சலசலப்பிலும் சிக்கிக் கொள்ளாமல், தம் நடிப்பு ஒன்றையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அன்று முதல் இன்று வரை தொடர்ந்து ஓர் உயர்ந்த இடத்தை வகித்து வருகிறார் மனோரமா."

– என்று புகழும் சாந்தா, கிருஷ்ணகான சபாவின் நிருத்திய சூடாமணி விருது பெறுகிறார். கலாக்ஷேத்ரா மாணவியாக ஆரம்பித்து இன்று பரதகலாஞ்சலி நடனப் பள்ளியின் மாணவிகளுடைய அன்புக்குரிய 'சாந்தாக்கா'வாக உயர்ந்திருப்பவர். இவர் கணவர் தனஞ்செயனுக்கு இதே விருது ஏற்கெனவே தரப்பட்டுள்ளது.

விஜய் சிவா :

"என்னுடைய சாய்ஸ் வெங்கட்ராகவன். ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டால் அதில் முழுதுமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு அதில் பர்ஃபெக்ஷனை அடைவது அவர் குணம். ஒரு சக்ஸஸ்ஃபுல் ஆஃப் ஸ்பின்னர். கல்வி பொஸிஷனில் நின்று ஃபீல்டிங் செய்வதில் திறமைசாலி. ஃபீல்டு பிளேஸிங்கில் கெட்டிக்காரர். 74 – 75 தில்லி டெஸ்ட் மாட்சில்

• நா. மகா லிங்கம்



• விஜயசிவா

• சண்முகசுந்தரம்

• வெங்கட் ராகவன்







• சாந்தா தனஞ்செ

காப்டன்; அடுத்த டெஸ்ட் மாட்சில் ட்வெல்த் மேன்! ஆனால் இரண்டையுமே ஒரே மாதிரியாக எடுத்துக் கொண்டார் வெங்கட். அப்புறம் அவரை டெஸ்ட் கிரிக்கெட்டிலிருந்து ட்ராப் செய்தார்கள். வெங்கட் சளைக்கவில்லை... கமெண்டேட்டர் ஆகப் போனார். அதிலும் நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொண்டார். கபில் தேவை இளம் காப்டனாக அனுப்பிய போது, அநுபவசாலியான வெங்கட் அவருக்குத் துணையாகப் போனார். டீம் மானேஜராக இருந்தார். டி.என்.சி.ஏ. செக்ரடரியாகப் பதவி வகித்தார். அப்புறம் அம்பயரிங் பயிற்சியில் தேறி, இண்டர்நேஷனல் லெவலுக்கு அம்பயர் ஆனார். ஸோ, வெங்கட்டுக்கே என் விருது!

– என்று பாராட்டும் விஜய் சிவா 'பர்ஃபெக்ஷனை' நாடுவதில் வெங்கட்டுக்குச் சற்றும் சளைத்தவரல்ல. இனிமையான வாலிப இசைக் கலைஞராக ஆரம்பித்து, இன்று திறமையுடன் முதிர்ச்சியும் ஆத்மார்த்தமான ஈடுபாடும் கலந்த முழுமையான பாடகராகப் பிரகாசிக்கிறார்.

கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸின் இசைப் பேரொளி பட்டம் இவரைத் தேடி வந்ததில் ஆச்சரியம் என்ன!



• வேதவல்லி

**ஆர். வேதவல்லி :**

**வா**ழ்க்கையில் எத்தனையோ பேருக்கு கடைசிக் காலம் சந்தோஷமாக இருப்பதில்லை. நிறைய ஏமாற்றங்கள். தன் குழந்தைகளாலேயே நிராகரிக்கப்பட்ட நிலை கூட நிறையப் பேருக்கு இருக்கிறது. இப்படிப்பட்ட அநாதரவான பெண்களை ஒரு குடையின் கீழ் கொண்டு வந்து 'விச்ராந்தி'யின் நிழலைக் கொடுக்கிறார் சாவித்திரி வைத்தி. எத்தனையோ பேருக்கு அவர் கையாலேயே அந்திமக் காரியங்கள் செய்திருக்கிறார் சாவித்திரி. புக் பேங்க், படிப்புக்கு வசதி, ஃபேமிலி கவுன்சிலிங் என்று அமைதியாக சமூக சேவை செய்து வருகிறார். இவருக்குக் கொடுக்காமல் என் விருதை வேறு யாருக்குக் கொடுப்பேன்?"

– நெகிழ்ந்து போய்க் கூறுகிறார் வேதவல்லி. கச்சேரிகள் செய்வதை விட கர்நாடக இசையைக் கற்றுக் கொடுப்பது மிகவும் கஷ்டம். இரண்டையுமே திறம்படச் செய்து வருபவர் இவர். இசைத் துறை சேவையில் பொன்விழா கண்ட இவருக்கு இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடியின் சங்கீத கலா சிகாமணி பட்டம் கிடைக்கிறது.

• சாவித்திரி வைத்தி

**திருப்பாம்புரம் சண்முகசுந்தரம் :**

"**எ**ன் விருது அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்களுக்குத்தான். சொல்லாலும் செயலாலும் சிந்தனையாலும் தொடர்ந்து தமிழிசைக்குத் தொண்டாற்றி வருபவர் மகாலிங்கம் அவர்கள். கல்வித் துறையில் அவர் சிந்தனை ஆக்கபூர்வமானது. அது போலவே தமிழிசை இயக்கத்திலும் அவர் அக்கறை காட்டி வருவதால்தான் தமிழிசை அழிந்து போய் விடாமல் இருக்கிறது!"

– இவ்வாறு சண்முகசுந்தரம் கூறும்போதே தமிழிசையில் அவருக்கு உள்ள மெய்யான ஈடுபாடு வெளிப்படுகிறது. பழுத்த இசைப் பாரம்பரியத்தில் வந்தவர்– சென்னை அரசினர் இசைக் கல்லூரி முதல்வர். தமிழிசை சங்கத்தினர் இவருக்கு இசைப் பேரறிஞர் பட்டம் தந்து பெருமை கொள்கிறார்கள்.

– சாருகேசி












### கேஸட் உலகம்

# பரபரப்புக்கே முன்னுரிமை!

டிசம்பர் என்றாலே கச்சேரி சீசன். சமீப வருடங்களாக அது கேஸட்களின் சூடான விற்பனை சீசனும் கூட! ஒருசில கேஸட் கம்பெனிகள் மட்டுமே கோலோச்சிய காலம் மாறி, ஆண்டுக்கு நாலைந்து புதிய நிறுவனங்கள் இந்தச் சந்தையில் நுழைகின்றன... இத்தனை கலைஞர்கள்; இத்தனை நிறுவனங்கள்... எல்லோருக்கும் இடமிருக்கிறதா...? ஒரு ரவுண்ட் விசாரித்தோம்.

கர்நாடக இசை கேஸட்டுகளை வெளியிடும் 'வாணி கேஸட்ஸ்' விஜயராகவன், "இந்தத் தொழில் ரொம்ப திருப்திகரமாக இருக்கிறது" என்கிறார். பத்து வருடங்களுக்கு முன் ஏ.வி.எம். ஆடியோவை விட்டு வெளியே வந்து சொந்தமாக கேஸட் நிறுவனம் தொடங்கியவர் இவர்.

"எங்கள் நிறுவனம் க்ளாஸிகல் ஒலிநாடாக்களை 1984லிருந்து வெளியிடத் தொடங்கியது. முதலில் மகாராஜபுரம் சந்தானத்தின் கேஸட்டை வெளியிட்டோம். 1985-ல் இரட்டை கேஸட் ஆல்பங்களை வெளியிடத் தொடங்கினோம். நல்ல வரவேற்பு" என்கிறார் ஏ.வி.எம். ஆடியோவில் ரெகார்டிங் ஆபீசராக







இருக்கும் சேஷகிரிராவ். என்றாலும், சென்னையில் கர்நாடக இசை கேஸட்டுகளை விற்கும் கடைகளை விரல் விட்டு எண்ணி விடலாம்.

மயிலையிலுள்ள கிரி டிரேடிங் ஏஜென்ஸியின் நிறுவனர் ஐயப்பன் கூறுகிறார் - "சின்மயா மிஷனைச் சேர்ந்தவர்கள் தாங்கள் வெளியிட்ட ருத்ரம், சமகம் ஆகிய கேஸட்டுகளைக் கொடுத்து விற்கச் சொன்னார்கள். அப்போது ஸ்டேஷனரி கடை வைத்துக் கொண்டிருந்த நான், தயக்கத்துடன் ஒப்புக் கொண்டேன். அன்று பிரதோஷம். வகைக்கு இருபது என்று அவர்கள் கொடுத்துச் சென்ற நாற்பது கேஸட்டுகளும் அன்று மாலைக்குள் விற்றுத் தீர்ந்தன. ஒரு கேஸட்டுக்கு ஆறு ரூபாய் கமிஷனும் கிடைத்தது. அப்போதுதான் தீர்மானித்தேன், கேஸட் விற்பனையில் தீவிரமாக இறங்க வேண்டுமென்று."


• அமோக விற்பனை...


• சேஷகிரிராவ்

அவரது கடையில் எப்போதுமே வாடிக்கையாளர்கள் நிரம்பி வழிவதற்கு 'கடை சிறியது' என்பது மட்டுமே காரணம் அல்ல! "தொடக்கத்தில் தினமும் ஆறு கேஸட்டுகள் விற்றன என்றால் இப்போது தினமும் சராசரியாக ஆயிரம் கேஸட்டுகள் விற்கின்றன" என்கிறார்.

கர்நாடக இசை கேஸட்டுகளாகட்டும், பக்திப் பாடல் கேஸட்டுகளாகட்டும், ஜேசுதாஸுக்கு இருக்கும் டிமாண்டே அலாதி. இதன் காரணமாக அவரது சொந்த கேஸட் நிறுவனமான 'தரங்கிணி' ஒரு பொன் முட்டையிடும் வாத்தாகவே திகழ்கிறது.

**வி**ற்பனை பரபரப்பில் அடுத்த இடம் சுதா ரகுநாதனுடையது என்று சொல்லலாம்.

"இதுவரை உங்கள் கேஸட்கள் எவ்வளவு வந்திருக்கின்றன?" என்று கேட்டால் சுதா ரகுநாதன் யோசிக்கிறார்.

"ஓரளவாவது சரியா சொல்லணுமில்லையா?" என்று இழுத்துவிட்டு, "35லிருந்து 40 இருக்கலாம்" என்கிறார்.

"சுதா பாடி நாங்கள் வெளியிட்ட 'ராமபக்தி சாம்ராஜ்யம்' 1994-ன் பெரும் ஹிட்டாகி விற்பனையில் சாதனை படைத்தது" என்கிறார் சேஷகிரி ராவ்.

இப்படி விற்பனையில் சாதனை படைத்தால் அந்த லாபத்தில் இசைக் கலைஞர்களுக்குப் பங்கு உண்டா?

பெரும்பாலும் கிடையாது! இசைக் கலைஞர்களுக்கு ராயல்டி முறையில் சன்மானம் வழங்குவது ஹெச்.எம்.வி. நிறுவனம் மட்டும்தான்.

"இப்போதெல்லாம் நாங்கள் ராயல்டி முறையைப் பின்பற்றுவதில்லை. ரெகார்டிங் முடித்தவுடனேயே குறிப்பிட்ட ஒரு தொகையை மொத்தமாகக் கொடுத்து விடுவோம்"

என்கிறார் சேஷகிரி ராவ்.

"நாங்களும் மொத்தமான தொகையைத் தான் வழங்குகிறோம். இதனால் கேஸட் தயாரிப்பு நிறுவனங்கள் தங்களிடம் சரியான கணக்குக் காட்டுகிறதா என்ற சந்தேகம் இசைக் கலைஞர்களுக்கு வருவது தடுக்கப்படுகிறது. குறைவாக விற்றால் அதை அறிந்து சங்கடப்படும் வாய்ப்பும் தவிர்க்கப்படுகிறது..." என்கிறார் 'வாணி' விஜயராகவன்.

"இப்படி ஒரு குறிப்பிட்ட தொகையை 'அவுட்ரைட் பேமெண்ட்'டாகப் பெற்றுக் கொள்வதைப் போன்ற முட்டாள்தனம் எதுவுமே கிடையாது என்று வெளிநாடுகளிலுள்ள பலர் என்னிடம் சொல்லி விட்டார்கள். அங்கெல்லாம் ராயல்டி முறைதான். இப்போதும் கூட, சீர்காழி கோவிந்தராஜன் பாடிய பாடல்களுக்கான ராயல்டி அவரது வாரிசுகளுக்கு வருவதாக அறிகிறேன். இப்படி ஒரு முன்னோரின் திறமை அவரது சந்ததிகளுக்கும் உதவுகிறது என்பது ஒரு சந்தோஷமான விஷயமில்லையா? என்றாலும் குழப்பமில்லாமல் இருக்க வேண்டும் என்பதற்காக இப்போதைக்கு ராயல்டி முறையை நாங்கள் வற்புறுத்துவதில்லை" என்கிறார் சுதா ரகுநாதன்.



• ரெக்கார்டிங் நடக்கிறது...

எம்.எல்.வி., காருக்குறிச்சி அருணாசலம், மதுரை மணி ஐயர் போன்றவர்களின் இசைக்கு என்றுமே மவுசு உண்டு. அவர்கள் காலத்தில் கேஸட் வியாபாரம் சரியாக அறிமுகமாகவில்லை. அதே சமயம் மொத்தமே பதினைந்து அல்லது முப்பது நிமிடங்கள் ஓடும் கிராமபோன் ரெகார்டுகளில் அவர்களது கச்சேரியை வியாபார ரீதியாகப் பதிவு செய்வதும் சாத்தியமாகவில்லை. இந்த நிலையில் அவர்கள் இயற்கை எய்திய பிறகு, அவர்களது ரசிகர்கள் யாராவது அவர்களது கச்சேரியைப் பதிவுசெய்து வைத்திருந்தால் அதிலிருந்து கேஸட் வெளியிடுவதைப் பல நிறுவனங்கள் செய்து வருகின்றன.

"பலசமயம் இந்தக் கச்சேரிகளுக்குப் பக்கவாத்தியம் வாசித்தது யார் என்பதே தெரியாது. கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்து அவர்களுக்கும் தொகை அளிப்பதுண்டு. திருவள்ளூர் சுப்ரமணியம், தஞ்சாவூர் கிருஷ்ணமூர்த்தி ஆகிய எம்.எல்.வியின் பக்கவாத்தியக்காரர்களுக்கு இப்படி சன்மானம் அளித்தபோது அவர்கள் நெகிழ்ந்து போனார்கள்" என்கிறார் சேஷகிரி ராவ். என்றாலும் கேஸட் தொழிலைப் பொறுத்தவரை ஒரே பாடலாசிரியரின் கீர்த்தனைகளைத் தொகுத்து காஸெட் ஆக்கும் போது கூட அதற்கான அனுமதியைப் பெறுவதாகத் தெரியவில்லை. அவர்களது வாரிசுகளும் பாடல் பாடப்பட்டாலே போதும் என்று திருப்தியடைந்து விடுகிறார்கள் போலும்.

கர்நாடக இசை கேஸட்டுகளைப் பதிவு செய்கிற விதமே வித்தியாசமாக இருக்கிறது.

பொதுவாக மதியம் இரண்டிலிருந்து இரவு ஒன்பது மணிவரைதான் ரெகார்டிங் வைத்துக் கொள்ளப்படுகிறதாம். ஒரு கேஸட்டுக்கான ஒலிப்பதிவு நான்கு நாட்களில் முடியும். சில சமயம் தொழில்நுட்பச் சிக்கல் மற்றும் இசைக் கலைஞரின் 'மூடு' காரணமாக பதினைந்து நாட்கள் கூட இழுக்கடிக்கப்படலாம். பக்கவாத்தியக்காரர்கள் யார் என்பதைப் பெரும்பாலும் முடிவு செய்வது பாடகர்கள்தான். ஆனால் இந்த விதி கர்நாடக இசை கேஸட்டுகளுக்கே பொருந்தும். பக்திப் பாடல்களுக்கான ஆர்கெஸ்ட்ராவைத் தீர்மானிப்பது கேஸட் தயாரிப்பு நிறுவனம்தான்.

ஒரு கேஸட்டின் மொத்த தயாரிப்புச் செலவு சுமார் நாற்பதாயிரம் ரூபாய் ஆகிறதாம். "தொடக்கத்திலேயே - பிரபல கலைஞரென்றால் - நாலாயிரம் கேஸட்டுகள் வெளியிடுவோம். பொதுவாக மூன்று மாதங்களுக்குள் விற்பனையாகிவிடும். பிறகு டிமாண்டுக்குத் தகுந்தபடி அதிகப் பிரதிகள் எடுப்போம்" என்கிறார் விஜயராகவன்.

'மார்க்கெட்டிங்' கலையும் புத்திசாலித்தனத்தோடு பயன்படுத்தப்படுகிறது. கடைக்குப் போனால் ஒருசில இளம் கலைஞர்களின்

க்ளோஸ்-அப் முகங்கள் வெவ்வேறு போஸில் கேஸட் கவர்களின் மீது தோன்றி நம்மை அசா வைக்கிறது. டக்கென்று அவற்றை அடுத்தடுத்துப் பார்த்தால் ஒரு புகைப்பட ஆல்பத்தைப் புரட்டியது போன்ற எண்ணம் எழவே செய்கிறது. விற்பனையை நிர்ணயிப்பதில் கேஸட் உறைகளுக்கு (wrappers) நிச்சயம் பங்கு உண்டு என்கிறார்கள்.

"இதுவரை தங்கள் தயாரிப்புகளை பளிச்சென்று பார்வையில் படுமாறு வைக்க எந்த கேஸட் நிறுவனமும் பணம் தந்ததில்லை. எந்தக் கடையிலுமே இந்த உத்தி பின்பற்றப்படவில்லை என்றே நினைக்கிறேன். ஆனால் 'மியூஸிக் டுடே' நிறுவனம் தங்களுக்காக (குறிப்பிட்ட கட்டணத்துக்கு) ஒரு ஷெல்பை ஒதுக்கி, அவர்களது கேஸட்டுகளை மட்டும் அவற்றில் அடுக்கி வைக்கக் கேட்டிருக்கிறார்கள்" என்று கூறுகிறார் 'கீதா கேஸட்' ஐயப்பன்.

இந்த வருஷம் எந்த கேஸட்டுக்காகவும் பாடுவதில்லையென்று தீர்மானித்திருக்கிறார் உண்ணிகிருஷ்ணன். காரணம்? "கர்நாடக இசையைப் பொறுத்தவரை நான் இன்னும் கொஞ்சம் 'மெச்சூர்' ஆக வேண்டுமென்று நினைக்கிறேன். தவிர, ஐந்தாறு மாதங்கள் வெளிநாடு போயிருந்தேன். அதனால் அதிகம் பயிற்சி செய்ய முடியவில்லை. கேஸட் நிறுவனத்தினர் அதிக பாடல்கள் கேஸட்டில் இடம்பெற்றால் விற்பனைக்கு உதவுமென நினைப்பதால், விஸ்தாரமான ஆலாபனைக்கு இடமில்லாமல் போகிறது..." என்று அடுக்குகிறார். "அடுத்த ஆண்டிலிருந்து, வருடத்திற்கு மூன்று கேஸட்டுகளுக்கு மேல் கொடுக்கப் போவதில்லை" என இப்போதே முடிவு செய்து விட்டார்.

"வட இந்தியாவில் ஒரு 'கஜல்' ஆல்பம் வெளியிட வேண்டுமென்றால் அதை 'ஒரு வருட ப்ராஜெக்ட்'டாக எண்ணி திட்டமிடுகிறார்கள். இங்கோ பரபரப்புக்குத்தான் முன்னுரிமை" என்று வருத்தப்படுகிறார்.

வருங்காலத்தில் கேஸட் வியாபாரம் இதே சூட்டோடு தொடருமா? இப்போதெல்லாம் காம்பாக்ட் டிஸ்குகளைத் தரமான முறையில் இந்தியாவிலேயே ஒலிப்பதிவு செய்ய முடிகிறது. அதன் விலை கிட்டத்தட்ட பாதியாகி விட்டது. அதைப் போட்டுக் கேட்பதற்கான 'டெக்'கின் விலையும் கணிசமாகக் குறைந்திருக்கிறது. இன்னும் ஐந்து வருடங்களில் ஸி.டி.க்கள் கேஸட்டுகளின் இடத்தைப் பிடித்துவிடும்!

- ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ராஜ ஓநாராயண்

## கி. ராஜேந்திரன் 19

டாலர் நோட்டுக்கள்! ஒவ்வொரு நோட்டும் நூறு டாலர்! கட்டு கட்டாக, அடுக்கு அடுக்காக, ஸூட்கேஸ்களின் அடிவாரத்தில், ரகசிய அறைகளில் பரவலாக!

நடுங்கிய உடலை பெரு முயற்சி செய்து கட்டுப்படுத்திக் கொண்டு கட்டிலில் அமர்ந் தாள். என்ன நடக்கிறது என்பது இனி அரிச் சுவடி பாடம். தான் செல்லும் ஒவ்வொரு ஐரோப்பிய நகருக்கும் சூரியாசுவாமி சார்பில் போதை மருந்து கடத்திப் போகிறாள். அறையை விட்டு ஊர் சுற்றிப் பார்க்க இவள் கிளம்பிப் போனதும், நோட்டுக்கட்டுகள் அடங் கிய பெட்டிகளுடன் உள்ளூர் ஏஜெண்ட் வந்து, அவற்றை வைத்து விட்டு, போதை மருந் துகள் அடங்கிய பெட்டிகளை எடுத்துப் போகிறான். அடுத்து பென்ஜமின் விஜயம் செய்கிறான். அவன் மீண்டும் போதை மருந் துகள் அடங்கிய பெட்டிகளை வைத்துவிட்டு பணம் நிரம்பிய பெட்டிகளை எடுத்துப் போகிறான். பணத்தை அவன் சூரியா சுவாமி யின் நெம்பர் அகௌண்டில், ஸ்விஸ் வங்கிக் கிளையில் கட்ட, இவள் போதை மருந்து சுமந்து அடுத்த நகருக்குப் பயணமாகிறாள். எந்த எந்த நகரங்களிலெல்லாம் விநியோகமாக வேண்டுமோ அவற்றுக்கெல்லாம் விமான டிக் கெட் வாங்கிக் கொடுத்து இவளை சுற்றுலா அனுப்புகிறான் குருஜி. தப்பித் தவறி மாட்டிக் கொண்டால் கம்பி எண்ணப்போவது இவள் தான். தனக்கு ஒன்றுமே தெரியாது என்று குருஜி சாதித்து விடுவான்! ஆனால் காரியம் இடையூறின்றி நிறைவேறினால் அவனுக்குக் கோடி கோடியாகப் பணம்! வருமானவரி கிடையாது! ஊட்டி ஆசிரம நிர்வாகம் போன்ற சில அம்சங்களுக்குத் தேவைப்படும்போது கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் தமிழகம் வந்து சேரும்- அயல் நாட்டு பக்தர்களின் அன்புக் காணிக்கை என்ற பெயரில்!

என்ன செய்வது? தனக்கு ஒன்றுமே தெரி யாது என்று நாடகமாடுவது தவிர வேறு என்ன செய்ய முடியும்? ஆப்பிள் பணியாரம் சாப் பிட்டு வயிற்றை நிரப்பி, மினரல் வாட்டர் குடித்து தாகம் அடக்கி, பிற்பகல் சுற்றுலாவுக் குத் தயாராக வேண்டியதுதான்!

பயணம் என்னவோ சுவாரஸ்யமாகத் தான் இருந்தது. ரோமுலஸ், ரீமஸ் என்ற இரண்டு குழந்தைகள் கூடையில் கிடத்தப்பட்டு, ஆற்றிலே மிதந்து வந்து, கரை ஒதுங்கி, ஓநாயிடம் பால் குடித்து வளர்ந்து, குன்றின்மேல் ரோமாபுரியின் முதல் கட்டடம் எழுப்பி, அவர்களில் ஒருவன் பொறாமையால் சண்டை போட்டுச் சரிந்த கதை தொடங்கி, ஃபாஸிஸ சர்வாதிகாரி முசோலினி வரையில் ரோமாபுரியின் சரித்திரத்தை அத்தியாயம் அத் தியாயமாகப் பார்த்துப் "படிக்க" சான்றுகள், புகழ்பெற்ற கட்டடங்களாக அல்லது பாது காக்கப்பட்டு வரும் இடிபாடுகளாக இன்றும் இருக்கின்றன. எத்தனை மன்னர்கள்! சக்கர வர்த்திகள்! சர்வாதிகாரிகள்! எத்தனை புகழ் பெற்ற கிறிஸ்துவ மதகுருமார்கள்! போப்பாண் டவர்கள்! மாமேதைகளான சிற்ப, ஓவிய, கட்ட டக்கலை வல்லுனர்கள்! அனைவருக்கும் நினைவஞ்சலி செலுத்திக் கொண்டு ரோமாபுரி பழமையும் புதுமையும் கலந்து கம்பீரமாகக் காட்சி தருகிறது. பல மியூஸியம்கள் வேறு, விலை மதிக்க முடியாத பளிங்குச் சிலைகளை யும் ஓவியங்களையும் பாதுகாக்கின்றன. எதைப் பார்ப்பது? எதை விடுவது? மூன்று மணிநேர அவசர டூர், இத்தாலியின் சரித்திர சிறப்புக்கும் கலைப் பாரம்பரியத்துக்கும் ஒரு சாம்பிள் சுற்றுலாதான்!

கிறிஸ்து பிறப்பதற்கு நானூறு ஆண்டு களுக்கு முற்பட்ட கோயிலின் இடிபாடுகள் தொடங்கி, ரோமன் ஃபோரம் என்ற பகுதியில், எத்தனையோ உன்னதமான கட்டடங்களின் சிதைவுகள். அவற்றை புதுப்பிக்காமல் அப்படி அப்படியே பாதுகாத்து, தீயினாலும் படை யெடுப்புகளாலும் பாழ்பட்டமைக்குக் கதைகள் கூறி, ஒரு கனவுலகப் பயணத்தில் அழைத்துப் போனார் வழிகாட்டி.

"அதோ பாருங்கள்"என்று குன்றின் உச்சியி லிருந்து கை காட்டியபோது, கீழே ஒரு நீண்ட மெகா தாழ்வாரம் போன்ற அமைப்பு தெரிந் தது. "அந்த நாளில் ரத சாரத்தியப் போட்டிகள் நடந்த இடம். கற்பனையைச் சிறகடிக்க விடுங் கள்; அல்லது 'பென்ஹர்' சினிமாவையாவது ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்!"

மேலும் பயணித்து இன்னொரு இடத்தில் இறங்கினால், கலோஸியம்! தோல்வி கண்டும் கலங்காத வீரன் போல் தகர்ந்து போன பிறகும் தலை நிமிர்ந்து நிற்கும் விளையாட்டு அரங்கம்!

# இருட்டு அரண்மனைகள்



"இன்றைக்கு உலகின் எந்தப் பகுதியில கட்டப்படும் புத்தம்புது ஸ்டேடியம் எதுவானாலும் இதற்கு ஈடாகுமா!" என்று கேட்டார் கைடு. "சிங்கம், கரடி போன்ற பயங்கர மிருகங்களுடன் இங்கு கிளாடியேட்டர்கள்- திண்தோள் தீரர்கள்- ஆயுதமின்றி சண்டை போடுவார்கள். சுற்றிலும் பல்லாயிரக் கணக்கான மக்கள் அமர்ந்து வேடிக்கை பார்ப்பார்கள். எட்டு வகுப்பினருக்கு எட்டு நுழை வாயில்கள்; படிப் படியாக உயரும் இருக்கைகளுடன் கூடிய வட்ட வடிவ அமைப்பு எல்லாம் கூட அதிசயமில்லை. யுத்தம் நடக்கிற தரை மட்டத்துக்குக் கீழே பிரும்மாண்ட நிலவறை; அதிலே துஷ்ட மிருகங்களை அடைத்து வைக்கக் கூண்டுகள்; கிளாடியேட்டர்கள் வந்து போக வசதிகள்! ஆரவார வரவேற்புக்கிடையே ஒருபுறம் சிங்கம் மேலேறி வரும்; மறுபுறம் வீரர் உயர்ந்து தோன்றுவார்" என்று அவர் கூறி வந்த போது, சாயாவும் பிறரும் குட்டிச் சுவர்களையா பார்த்தார்கள்? நீரோ மன்னனின் ஆட்சியில் நடைபெற்ற கொடூர விளையாட்டைக் கண்டுதான் சிலிர்த்தார்கள்!

தேவாலயங்களுள் ஒன்றான ஸான் பியட்ரோவில் மைக்கலாஞ்சலோவின் 'மாஸ்டர் பீஸ்' சிருஷ்டி என்று கருதப்படும் மோஸஸ் சிலையைக் கண்டு ரசித்து உருகினாள் சாயா. தாடிச் சுருள்களில் ஒவ்வொரு முடி இழையும் துல்லியமாகத் தெரிந்தது; மெலிந்த உடலில் புடைத்து நின்ற ரத்த நாளங்கள் பளிங்குச் சிலையில் பாங்காகப் புலப்பட்டது. எதிரே இருப்பவரைத் துச்சமாகப் பார்த்து ஊடுருவும் கண்கள் பயபக்தியை உருவாக்கின. இவையெல்லாவற்றையும் விட மோஸஸின் தலையில் இரண்டு சிறிய கொம்புகளைக் காண்பித்ததில் சிற்பி தனது அற்புதமான கற்பனைத் திறனை வெளிப்படுத்தியிருந்தார்! 'நீ என்ன கொம்பனோ?' என்று யார்தான் கேட்டுவிட முடியும்? இந்தக் கொம்புகள் பேரறிவின் உருவகம்; ஞான ஒளியின் வெளிப்பாடு!

டிரெவி ஃபவுண்டனுக்கு அவள் வந்து சேர்ந்தாள். எதிரே, சாதாரண பொங்கு புனலா அது! கலை ரசனையின் சிகரம்! கடலரசன் கிளிஞ்சல் வடிவத் தேரில் ஏறி, நீர்க்குதிரைகள் அதனை இழுத்து உயர, பவனி வருகிறான்! மன்னர் வருகையை அறிவித்து சங்கு ஊதும் கட்டியக்காரர்கள்; ஏவலுக்குக் காத்திருக்கும் கடல் கன்னிகள்; எதிரே கடலின் உருவகமாகத் தெரிந்த நீர்த் தடாகம். இந்தச் சிற்ப விசித்திரத்திற்கிடையே நாலைந்து இடங்களில் குட்டி அருவிகளாகச் சொரியும் டைபர்

நதி நீர்! பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த கலைஞன் நிக்கோலோ ஸால்வியின் நினைவான, நிறைவான கனவு!

அறைக்குத் திரும்பியபோது போன் ஒலித்தது. "குருஜி பேசறேன். பாரிஸில் இருக்கேன். ஆனால் அங்கே நடப்பது தெரியும். அப்பப்ப செய்தி வரும்"என்றான். வெறுப்பு மௌனத்தில் மூடிய, அவன் தொடர்ந்தான்: 'நீ சம்பந்தமில்லாத விஷயங்கள்ல தலையிடறே; தேவையில்லாம சூட்கேஸ்களைக் குத்திக் கிழிக்கிறே! ஆபத்துல அநாவசியமா சிக்கிக்காதே! ஜாக்கிரதை!"என்று எச்சரித்தான்.

எரிச்சல் பற்றிக் கொண்டுவர, "உனக்கு வெட்கமாயில்லே? ஆன்மிக உயர்வுக்கு ஆசிரமம் நடத்தறதா சொல்லிக்கிட்டு போதை மருந்து கடத்தறியே?" என்றான்.

"இதிலே வெட்கப்பட என்ன இருக்கு சாரதா?" என்றான். "இதுவும் ஆன்மிகம்தான்! என் பக்தர்களுக்கு பூலோகத்திலேயே சொர்க்கத்தைக் காட்டறேன்! நீயும் டிரை பண்ணிப் பார்க்கிறியா? நாளைக்கு பென்ஜமினை இன்ஜெக்ஷன் சிரிஞ்சோட வரச் சொல்லவா?"

"அடப்பாவி" என்று சபித்து ஃபோனை துண்டித்தான்.

* * * *

பாரிஸின் பிரதான சாலையாகிய 'சாம்ப்ஸ் எலைஸி'யில் கார் சென்று கொண்டிருந்தது. எதிரே 'ஆர்க் டி டிரயம்ப்' என்ற வெற்றி வளைவு நெப்போலியனை நினைவூட்டியதோடு, உலகப் போர்களில் உயிர் துறந்த பிரெஞ்சு வீரர்களுக்கும் அஞ்சலி செலுத்திக் கொண்டிருந்தது.

"பாரிஸில் நீ என்ன பார்க்க விரும்புகிறாய்? நாட்டர் டாம்? ஐஃபெல் டவர்? மௌலின் ரூஷ்? அநேகமாக நாளைக் காலை நீ புறப்பட வேண்டியிருக்கும்" என்றான் ஜேம்ஸ் பிளாக்.

சென்ற முறை வந்தபோது இன்பசாகரன் நாட்டர்டாம் தேவாலயத்தின் அழகில் சொக்கி, விக்டர் ஹியூகோவின் கூனன் கதை நினைவு கூர்ந்து கண் பனித்திருந்தான். ஐஃபல் டவரின் மேலே லிஃப்ட்டிலும் கால் நடையாகவும் அனுமதிக்கப்பட்ட உயரம் ஏறி பாரிஸைப் பறவைக் கண்ணோட்டத்தில் கண்டு களித்திருந்தான். லீடோ நைட் கிளப்பில் நிர்வாணத்தையும் வென்ற கலையழகு மிக்க காட்சி ஜோடனைகளைப் பார்த்து பிரமித்திருந்தான்.

"பார்க்க வேண்டியது எவ்வளவோ; ஆனால் இருக்கிற குறைந்த நேரத்தில் பார்த்தே ஆகவேண்டும் என்று நான் நினைப்பது லூவ்ர் மியூஸியம். குறிப்பாக மோனாலிஸா ஓவியம். சென்ற தடவை நான் வந்தபோது வாராந்திர விடுமுறை என்று சொல்லி விட்டார்கள்."

"ஜெட் பயணக் களைப்பைப் பொருட்படுத்தாமல் வந்தால், இப்போதே அழைத்துப் போகிறேன்"என்றான் ஜேம்ஸ். "ராத்திரி அசந்து தூங்கி சமாளித்துக் கொள்கிறாயா?"

"சரி" என்றதும் காரைத் திருப்பினான். வரிசை வரிசையாகப் பழைமை முகப்பு மாறாத வீடுகள். முன்புறத்தை மட்டும் அப்படியே வைத்துக் கொண்டு, பின் பக்கம் இடித்து நவீன வசதிகளுடன் புதுப்பித்துக் கொள்வார்கள். புராதனத் தோற்றத்துக்கு அத்தனை முக்கியத்துவம்.

ஒற்றுமை, அமைதி என்ற அர்த்தத்தில் பெயரிடப்பட்டது "கான்கார்ட்" சதுக்கம். ஆனால் இங்கே தான் புரட்சியின்போது கில்லட்டோன், இயந்திர கதியில் இயக்கப்பட்டு ஆயிரக் கணக்கான தலைகள் உருண்டன! மத்தியில் எகிப்திய அன்பளிப்பான ஊசி முனை ஜெய ஸ்தம்பம். இதைத் தாண்டியதும் மாபெரும் பூங்காவனம். மரங்களுக்குத்தான் இங்கே எத்தனை மவுசு!

லூவர் மியூஸியம் கடல் போன்றது. ஏழெட்டு திக்குகளில் கிளைபரப்பி விரிந்து பரவும் கட்டட அமைப்பு. மோனாலிஸா இருக்கிற இடத்துக்கு அம்புக் குறிகள் அழைத்துப் போயின. அவற்றைப் பின்பற்றி மற்றவற்றைப் புறக்கணித்து முன்னேறினார்கள்.

சின்னஞ் சிறிய ஓவியம். அளவான வெளிச்சம். ஃபிளாஷ் ஒளி புராதனப் படத்தைப் பாதிக்கும் என்பதால் 'NO PHOTOGRAPHY'. சிலர் தடை உத்தரவை மீறி, "பளிச், பளிச்!"

ஆனால் அந்தப் புன்னகை 'பளிச்' அல்ல. அமைதியான, இலேசான மர்மம் இழையோடுகிற முறுவல். வெகு நேரம் நின்று பார்க்கச் செய்கிற, கவனத்தைத் திசை திருப்ப விடாமல் ஈர்க்கிற பார்வை, உதட்டு நெளிவு, அதில் ஏளனம்?

'சொல் மோனாலிஸா! அந்தப் பெண் யார்? மர்மத்தை விடுவி! அந்த ஃபோட்டோவில் இருப்பவள்... சாயாதானே? வெனிஸ்ஸுக்கு அவள் ஏன் வந்தாள்? இன்டர்போலின் கண்காணிப்புக்கு உள்ளாகும் வகையில் அவள் ஏன் சூரியாசுவாமியுடன் வரவேண்டும்? என்னிடம் கோபித்துக் கொண்டு அவனிடம் தஞ்சம்புகுந்து, அவனால் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறாளா?'



"பின்னே எத்தனை நாளைக்குத்தான் 'பேஷ் பேஷ்', 'பலே'ன்னு சொல்றதாம்?"

— அகிலா

# தனபிரியா

வழங்கும்

## சேமிப்பு திட்டங்கள்

◆ தனயோக ஃபிக்செட் டெபாசிட் திட்டம் ◆

டெபாசிட்களுக்கு 1 கிராம் தங்க காசு வழங்கப்படும்

### க்யூமுலேடிவ் டெபாசிட்

| வருடம் | டெபாசிட் தொகை | முதிர்வு தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | 10,000 | 13,000 | 30.00% | 2% |
| 26 மாதங்கள் | 10,000 | 16,000 | 27.69% | 2% |
| 36 மாதங்கள் | 15,000 | 30,000 | 33.33% | 3% |

### ஃபிக்செட் டெபாசிட்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 25% | ரூ. 5,000/- | 5% |

### பென்ஷனர் மற்றும் முதியோர்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 30% | ரூ. 5,000/- | 2% |

### தனபிரியா பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- இரு மடங்காகிறது. 36 மாதங்களில் ரூ. 50,000/- ஊக்கப் பரிசு : 5 கிராம் தங்க காசு

### தனயோக பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 50,000/- மும் மடங்காகிறது. 57 மாதங்களில் ரூ.1,50,000/- ஊக்கப் பரிசு : 9 கிராம் தங்க காசு

### திருமகள் திருமண திட்டம் ரிக்கரிங் டெபாசிட் திட்டம்

ரூ.1000 x 25 மாதங்கள் அல்லது
ரூ. 500 x 25 மாதங்கள்

26ம் மாத துவக்கத்தில் ரூ. 50,000/- அல்லது ரூ. 25,000/- பெற்று 27ம் மாதம் முதல் மாதம் ரூ.1000/- அல்லது ரூ.500/- வீதம் 25 மாதத்திற்கு எந்தவிதமான வட்டி இல்லாமல் திரும்ப செலுத்தலாம் அல்லது ரூ. 25,000/-ஐ மறுமுதலீடு 10 வருட காலத்திற்கு செய்து ரூ.2,32,835 பெறுங்கள்

### ஓய்வுதாரர் நலத் திட்டம்

| | |
|---|---|
| குறைந்தபட்ச முதலீடு காலம் வட்டி விகிதம் | ரூ. 1 லட்சம் அல்லது அதற்கு மேல் 6 வருடங்கள் அல்லது அதற்கு மேல் 26 சதவிகிதம் வருடத்திற்கு மற்றும் 1800 சதுர அடியில் வீட்டு மனை திருமுல்லை வாயில் நகரில் இலவசமாக பத்திர பதிவு செய்து வழங்கப்படும் அல்லது ரூ. 15,000/- ரொக்கம் |

**வட்டி தொகைக்கு முன் கூட்டின காசோலைகள் பின் தேதியிட்டு வழங்கப்படும்**




● ஞாயிற்றுக் கிழமையும் அலுவலகம் இயங்கும் ●

**தனபிரியா இன்வெஸ்ட்மென்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்**

*காம்தார் பில்டிங் (2வது மாடி) 143/3. பிராட்வே, சென்னை – 600 108 போன் : 565668*

**"விரைந்து சேருங்கள் மகிழ்ச்சியாக வாழுங்கள்"**

"நகர்வோமா?" என்றான் ஜேம்ஸ். "இன்னும் நிறைய பார்க்க வேண்டியிருக்கிறது."

கால்கள் கெஞ்சும் வரை சுற்றிப்பார்த்தான். வேக வேகமாய் நடந்தான். அப்படியும் மியூஸியத்தின் இரு பகுதிகளைத்தான் வளைய வந்திருந்தான். எல்லாமே அற்புதங்கள்தாம். எல்லாமே விலை மதிக்க முடியாத பொக்கிஷங்கள்தாம். ஆனால் மோனலிசா பார்த்த பிறகு வேறு எதுவும் மனசில் நிற்கவில்லை. 'நாளை நான் சந்திக்கப் போகிற அவள், நிஜமாக சாயாவாகவே இருந்து விட்டால்? என்ன பேசுவது? எப்படி நடந்து கொள்வது?'

வெளியே வந்த போது இருட்டியிருந்தது. சாலை விளக்குகள் கூட பழைமைப் பாணி மாறாமல்தான் இருந்தன. துடைத்துத் துடைத்து வைத்துக் கொள்கிறார்கள். அவற்றின் நவீன சோடியம் வேப்பர் பிரகாசம் தொன்மைக் கலைச் சிறப்பைத்தான் பறை சாற்றின.

இத்தனை அழகுக்கும் அடிப்படைக் காரணங்கள் என்ன? முதலாவது பழம் பெருமை போற்றி, புதுமையைப் புகுத்தும் ஆர்வம்; இரண்டாவது, சுத்தம், பரம சுத்தம்; மூன்றாவது, இப்படி இருப்பதில் டூரிஸ்டுகளை ஈர்த்து பணம் பண்ண முடியும் என்ற ஞானம். 'நம்மூரை நினைத்தால் பெருமூச்சுதான் மிஞ்சுகிறது' என்று எண்ணினான்.

ஏகப்பட்ட விளக்குகள் பகட்டாக ஒளிர்ந்த பகுதிக்கு அழைத்துப் போனான் ஜேம்ஸ். "பாரிஸின் நைட்கிளப்புகள் அடர்த்தியாக உள்ள பகுதி. என்ன பார்க்கிறாய்? பிரெஞ்சு மண்ணுக்கே உரித்தான கேன்கேன் நடனமா? அல்லது தமிழ் மண்ணுக்கே உரியதான பரத நாட்டியமா?"

"பரதமா?" என்று வியந்தான்.

"இன்று ஒரு அரங்கேற்றம். தலைமை வகிக்கப் போவது யார் தெரியுமா? மூர்ச்சை அடையாதே! சூரியா சுவாமி!"

"பொருத்தம்தான்! பரதநாட்டியத்தின் தெய்விகத் தன்மை பற்றிப் பேசுவார். ஆன்மிகத் தேடலுக்கு எப்படி உதவுகிறது என்று விளக்குவார்" என்றான் வெறுப்பு இழையோடிய குரலில். "இங்கே சதங்கை ஒலி கேட்பதுதான் ஆச்சர்யம்."

"ஓரிரு பரத நாட்டியப் பள்ளிகளே பாரிஸில் இருக்கின்றன. உத்யோகம் நிமித்தம் இங்கே குடியேறியவர்களின் மனைவிமார்கள், அந்தக் கலை தெரிந்திருப்பதால் ஆரம்பித்து விடுகிறார்கள். நல்ல விதமாகப் பொழுது போகிறது. வருவாயும் கிடைக்கிறது."

"பயிலும் மாணவிகள்?"

"பிரெஞ்சு மாணவிகள் உண்டு. ஆனால் பெரும்பாலோர் இங்கு குடியேறிய தமிழர்களின் குழந்தைகள்தாம்."



"உங்க ரெண்டு பேரையும் எங்கேயோ பார்த்த மாதிரி இருக்குதே?"

"சிதம்பரத்துல பார்த்திருப்பீங்க. கண்டுக்காதீங்க."

—டி.வரதன்

\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\\

"போய்ப்பார்க்கலாம்" என்றான். கார் வேகமெடுத்தது.

அரங்கின் கடைசி மூலையில் நின்று பார்த்தார்கள். முன் வரிசையில் சூரியாசுவாமி. பெரும்பாலும் ஸ்ரீலங்கா தமிழர்கள். யுத்தத்தில் சிக்கித் தவிக்க விரும்பாமல் புகலிடம் தேடி வந்தவர்கள். பாரிஸில் ஏதோ பிழைப்பு நடத்தி காலத்தை ஓட்டுகிறவர்கள். சொத்துக்களைக் காசாக்கிக் கொண்டு வந்து குடியேறிய வசதியானவர்களும் உண்டு. பாண்டிச்சேரி தமிழர்களும் நிறையப் பேர்.

"இங்கு ஸ்ரீலங்கா தமிழர்களிடம் புலிகள் தண்டல் வசூல் செய்கிறார்கள்" என்று கிசுகிசுத்தான் ஜேம்ஸ். மேடையில் ஒரு பன்னிரண்டு வயது சிறுமி ஆடிக் கொண்டிருந்தாள். 'சென்னையிலே நாம் பார்க்கும் பல அரைவேக்காடு நடனத்துக்கு இது எவ்வளவோ தேவலாம்' என்று எண்ணினான். "வரி வசூல் எதற்கு?" என்று வினவினான்.

"இயக்கத்துக்குத்தான். அதி நவீன ஆயுதங்களுக்கு எவ்வளவு செலவாகும் தெரியுமா? வரி வசூல் இங்கு மட்டுமல்ல. ஸ்ரீலங்கா தமிழர்கள் உலகின் எந்தப் பாகத்தில் குடியேறி இருந்தாலும் அங்கெல்லாம் நடக்கும். தவிர, போதைப் பொருள் கடத்தலிலும் புலிகள் பணம் பண்ணுகிறார்கள்."

"அதைச் சொல்லு" என்றான் இன்பா. "எல்லா இடத்திலும் இந்த போதைப் பொருள் சனியன் எப்படியோ புகுந்து கொள்கிறது. மாணவரிடம், கலைஞர்களிடம், ஆன்மிகத்தில், யுத்த களத்தில்..."

"போதாக்குறைக்கு ருஷ்ய மாஃபியா வேறு" என்றான் ஜேம்ஸ்.

"அதென்ன புதிய கதை?"

"வெளியே வா, சொல்கிறேன்" என்று நகர்ந்தான் ஜேம்ஸ்.

அவனைப் பின்பற்றி கார் பார்க் நோக்கி நடக்கும் போது, 'இருக்கிற குழப்பம் போதாது என்று இது என்ன புது சிக்கல்?' என்று மேலும் பிரச்னைகளைச் சந்திக்கத் தன்னைத் தயார் படுத்திக் கொண்டான் இன்பா.

(தொடரும்)



### வேஷம்

நெல்லை மாவட்டத்தில், ரெட்டியார்கள் திருமணச் சடங்கில் ஒரு வினோதம். மாப்பிள்ளைக்குப் பெண் வேஷம் போட்டு, மணப் பெண் அருகில் நிறுத்துகிறார்கள்!

– எஸ். ஆர். சுப்ரமணியம், அம்பை.

### பூகம்ப சமாளிப்பு

அமெரிக்க சுற்றுப்பயணம் முடித்து, அறிஞர் அண்ணா ஒரு தரம் ஜப்பான் சென்றிருந்தார். அந்நாட்டு அமைச்சர் ஒருவர் அண்ணாவிடம் கிண்டலாக, ''இந்தியாவில் குறிப்பாக உங்கள் மாநிலத்தில் அடிக்கடி கிளர்ச்சியும் புரட்சியும் வெடிக்கிறதே, எப்படி சமாளிக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

பூகம்பத்தை நீங்கள் எப்படிச் சமாளிக்கிறீர்களோ, அதுபோலத்தான்!''

- இது அண்ணா சொன்ன பதில்.

- 'மூன்று முதல்வர்களுடன்' என்னும் நூலிலிருந்து

: செய்யது மைதீன், மேலப்பாளையம்.

### ஸ்கோர் என்ன?

தற்போது திருநெல்வேலி நகரை உலுக்கி வருவது, ஜாதி சண்டைகளால் நடக்கும் கொலைகளே! கலவரம் ஓய்வதுபோல் தெரியும். சட்டென்று மறுபடி சூடு பிடித்துவிடும்! பஸ்கள் ஓடாமல், கடைகள் திறக்காமல், நகர வாழ்க்கை சில மாதங்களாக ஸ்தம்பித்து விட்டது என்றே சொல்லலாம். கிரிக்கெட்டில், 'ஸ்கோர் என்ன?' என்று கேட்பது போல, 'இன்று எத்தனை கொலை?' என்று கேட்பது இங்கே சகஜமாகி விட்டது.

– எஸ். முகமது யூசுப், நெல்லை – 1.

### BEWARE OF BOARDS

என் உறவினர் ஒருவரது வீட்டின் வாசற்கதவில் உள்ளே நாய்கள் இருப்பதைக் குறித்து எச்சரிக்கும் விதமாக, 'Beware of dogs' என்று எழுதி வைத்திருந்தார்கள். அங்கே, தச்சு வேலைக்காக வந்த ஒருவர், போர்டு வாசகம் புரியாமல், உள்ளே நுழைந்துவிட, நாய் கடித்துக் குதறிவிட்டது! பின், வீட்டுக்காரரே மருத்துவச் செலவை ஏற்றுக் கொண்டது ஒருபுறம் இருக்கட்டும் -

இதுபோன்ற எச்சரிக்கை வாசகங்கள் தாய்மொழியிலேயே எழுதப்பட வேண்டியதன் அவசியம் புரிகிறதல்லவா? கூடவே சிறு படமும் (உதா : நாய் படம்) வரைந்து வைக்கலாமே!

- வி. முத்தையா, நெல்லை - 6.

### போஸ்டர் கலக்கல்

ஒருநாள் காலை உறங்கி எழுந்து வாசலுக்கு வந்தவன், எதிர்ப்பக்கச் சுவரில் ஒட்டப்பட்டிருந்த போஸ்டரைக் கண்டு அதிர்ந்தேன்.

'பிரபல ஆட்டோ தேவா கைது!' கொட்டை எழுத்துக்கள் பயமுறுத்தின. ஆட்டோ தேவா என் நண்பன். அன்று அவனுக்குத் திருமணம் வேறு!

பயந்தபடியே போஸ்டரை மேலும் படித்தபோது விழுந்து விழுந்து சிரித்தேன்.

''இன்று காலை 10 மணிக்கு தேவாவைக் கைது செய்து, பெரியோர்கள் மணமகள் செல்வியின் இதயச் சிறையில் அடைக்க இருக்கிறார்கள். அனைவரும் வருக!''

இதுமாதிரி போஸ்டர் ஒட்டி, 'கலக்கு'வதில் நெல்லை மக்களுக்குப் பேரானந்தம்!

– கோ. ரா. சந்திரன், சங்கரன்கோவில்.

இன்று எத்தனை கொலை?



# Kartik Fine Arts (Regd.)

Ph : 4997788

39, Bheemanna Garden Street, Madras 600 018

## 21st YEAR ART FESTIVAL - '95

(9th Dec. to 25th Dec. '95)

**INAUGURATION ON 9.12.95**

at **BHARATHIYA VIDYA BHAVAN**

East Mada Street, Mylapore, Madras 600 004.



4.30 p.m. - 6.30 p.m. Devotional Music by
**"Nandalala Innisai Kuzhu"**
**Shri. V. BALARAMAN**
(Managing Director, Ponds (India) Ltd.
inaugurates and confers the title
***"ISAI PEROLI"*** **on Shri. N. VIJAY SIVA**

**Shri. N. RANGACHARY**
(Chairman, Central Board of Direct Taxes
& Ex-officio Special Secretary - Govt. of India)
will preside over the function.
Shri. **R. SESHASAYEE**
(Deputy Managing Director, Ashok Leyland Ltd)
will release the cassette of Shri. N. Vijay Siva
and
*Sangeetha Kalanidhi* **K.V. NARAYANASWAMY** will felicitate
Smt. **Shanthi Balaraman** will Light the *"Kuthuvilakku"*

7.30 p.m. **"Akilanda Nayaki"** Dance Drama by
Selvi **Deepa & Archana**
(Disciples of Smt. **Krishnakumari Narendran**)

**A.V.S. RAJA**
President

**T.V. VENKATRAMAN** I.A.S. (Retd.)
Chairman
Festival Committee

**R.RAJAGOPAL**
**M.R. KRISHNAMURTHI**
Secretaries

Co-Sponsors : • Ashok Leyland Finance • Balaji Group • Binny • Chettinad Cement Corporation • Dharani Group • ESSAR Group • G.R. Thanga Maligai • Indian Bank • ITC • IOB • IHFD • Kumbakonam City Union Bank • Lalitha Jewellery Mart • Lakshmi Trade Credit • Larsen & Toubro • Mohan Breweries • Nalli • Nagarjuna Finance • Newlink Overseas Finance • Ponds (India) Ltd • Readymoney Shoppe • Ramkashyap Investments Ltd. • Shriram Group • State Bank of India • Standard Chartered Bank • Sterling Holiday Resorts • Sanmac Group • Sangeet Natak Akademi • Tamilnadu Petro Products • Transworld Capital Credit Investment Ltd. • Trident Finance Ltd. • United India Insurance • Velvette Shampoo

EFFICIENT



# T.S.S. NIDHI LTD. ESTD 1973

## THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras - 600 004 Ph.4942303/4943365

BRANCHES
- THIRUVANMIYUR : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras-41 Ph. 410058
- TONDIARPET : 667, T.H.Road, Madras-81 Ph.5950472
- SAIDAPET : 11, Jones Road, Madras, -15 Ph.4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of **Rs.1,000/-**

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit **Rs.10,000/-**

Period **12 Months**

Interest payable Monthly **19.5%** p.a

Interest payable Annually **21%** p.a

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

### MONTHLY DEPOSIT RS.100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
* **Company is in 23rd year of service.**
* Transaction with members only. (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gm. (Rs.2400/- per 8 gms.)
* No Ceiling
* No Charges
* No Interest Tax
* Recurring Deposit not required
* **Your Jewels are insured at our cost.**

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

**P.S. SAMBASIVAM**
Secretary

**G.KUMARAVELU**
Vice-President

**K.R.V. RAMANI**
President



1995 டிசம்பர் 10
யுவ கார்த்திகை 24
மலர் : 54
இதழ் : 19

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பாழ்பட்டு நிற்கும் யாழ் தமிழர்கள்!

தமிழ்நாட்டில் நடந்து முடிந்த ஒருநாள் 'பந்த்' ஈழத் தமிழர்களுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ ஏதாவது பயனளித்ததா...?

தமிழக மக்கள் நவம்பர் முப்பதாம் தேதியை விடுமுறையாகக் கருதி பத்திரிகை படித்து, ரேடியோ கேட்டு காலத்தை ஓட்டினார்கள் என்பதற்கு மேலாக இந்த பந்த் எதையும் சாதிக்கவில்லை.

மாறாக, கதவடைப்புக்கு அரைகூவல் விடுத்த தி.மு.க.வும், அதை ஆதரித்த ஆளுங் கட்சியும் பொதுமக்களை ஒரு வார காலத்துக்கு ஒரு மணி நேரம் கூடுதலாக உழைக்கும்படி கேட்டிருக்கலாம். அதன் மூலம் கிடைத்திருக்கக்கூடிய வருவாயைப் பயன்படுத்தி, உணவு, உடை, மருந்துகள் போன்றவற்றை வாங்கியனுப்பி யாழ்ப்பாண மக்களுக்கு உதவியிருக்கலாம்.

ஆனால், இத்தகைய ஆக்கபூர்வமான சிந்தனையையும் செயல்பாட்டையும் நம் தலைவர்களிடம் எதிர்பார்க்க முடியாது.

⊛ ⊛ ⊛

'துப்பாக்கி முனையில் அமைதிப் பேச்சு வார்த்தை நடத்த ஒப்புக் கொள்ள மாட்டேன்!' என்று பிறந்த நாள் பிரகடனம் செய்கிறார் பிரபாகரன். இதே பிரபாகரன்தான் ஏற்கெனவே

இலங்கை அதிபர் சந்திரிகா முன்வைத்த மிகப் பரந்த அளவிலான சுயாட்சி திட்டத்தை நிராகரித்தார். இதிலிருந்தே புலிகளின் சுயநலப் போக்கு வெளிச்சத்துக்கு வருகிறது.

இந்த நிராகரிப்பின் விளைவாக, இலங்கைப் படை, யுத்தம் தொடுத்து யாழ்ப்பாணம் நோக்கி முன்னேற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

ஒரு சிறந்த திட்டத்துக்கு வாய்ப்பு தந்து பார்க்கக்கூட முன்வராத ஃபாஸிஸ பிடிவாதத்தின் விளைவுதான் இந்த யுத்தமும் அதைத் தொடரும் சோகங்களும்.

வேறு வழியின்றிப் போர் தொடுத்த சந்திரிகா அரசு, யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றி விட்டது. ஆனால் பிரச்னை இதோடு தீர்ந்து விடவில்லை.

கொரில்லா யுத்த முறைகளைக் கையாளும் புலிகள், காட்டுப் பகுதிகளில் பதுங்கியிருந்து திடீர்த் தாக்குதல் நடத்தியவண்ணம் இருப்பார்கள். பிரபாகரனும் இதர புலித் தலைவர்களும் வெளிநாடுகளுக்குப் போய் மறைந்து கொண்டு, அங்கிருந்தபடியே 'ரிமோட் கன்ட்ரோலி'ல் யாழ்ப்பாணத்தில் துன்பங்கள் தொடரச் செய்யவும்கூடும்.

இதையெல்லாம் கருத்தில் கொண்டு, சந்திரிகா அரசு செயல்பட வேண்டும். யாழ்ப்பாணத் திலும் கொழும்புவிலும் இலங்கையின் இதர முக்கிய இடங்களிலும் சளைக்காத ஒற்றாடல் சாகசங்களும் பாதுகாப்பு முயற்சிகளும் தொடர்ந்தவண்ணம் இருக்க வேண்டும்.

இதைவிட அதி முக்கியமானது, இலங்கைத் தமிழர்களின் மனப்பரப்பை வெல்வதற்கு சந்திரிகா மேற்கொள்ள வேண்டிய முயற்சி. யுத்த வெற்றியைக் காட்டிலும் இந்த வெற்றியே முக்கியமானது - கஷ்டமானதும் கூட...

வீடிழந்து, வாழ்க்கையிழந்து அகதிகளாக யாழ்ப்பாணத்தை விட்டு வந்துள்ளவர்களுக்கு,




உடனடித் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் ஆகியனவும் மருத்துவ உதவிகளும் தடையின்றிக் கிடைக்கச் செய்ய வேண்டும். தமிழர்கள் - தமிழரல்லாதார் என்ற பாரபட்சமின்றி இவ்வுதவிகள் அளிக்கப்பட வேண்டும்.

இதற்கு ஏராளமான பணம் தேவைப்படும். அயல்நாடுகளின் நிதியையும் சேவை அமைப்புகளின் உதவியையும் பெறுவதில் எந்தவிதமான தயக்கமும் இருக்கக் கூடாது.

இந்த உடனடித் தேவைகளைக் கவனித்த கையோடு புனர்வாழ்வு நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும்.

போருக்கு முன்னர் யாழ்ப்பாண மக்களுக்கு சந்திரிகா அளிக்க முன்வந்த சுயாட்சி அதிகாரங்களை இம்மி பிசகாமல் இப்போதும் வழங்க வேண்டும்.

யாழ்ப்பாணத்தில் தேர்தல் நடத்துவதும் அதிகார மாற்றங்களுக்கு வடிவம் கொடுப்பதும் மிகப் பெரிய சவாலாக இருக்கும். அமைதியை எதிர்க்கும் புலிகள் ஒருபுறம் தொல்லை கொடுப்பார்கள். பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சியினர் இன்னொருபுறம் சந்திரிகாவை எதிர்ப்பார்கள்.

ஆனால், நடந்த நிகழ்வுகளை ஆராயும் போது, இலங்கை அதிபர் இந்தச் சவால்களை எதிர்கொள்ளும் ஆற்றலும் மனோபலமும் படைத்தவரே என்று எண்ணத் தோன்றுகிறது.

நடைபெற்ற யுத்தமானது புலிகளை எதிர்த்துத்தானேயொழிய தமிழர்களை எதிர்த்து அல்ல; அமைதிக்காக நடத்தப்பட்ட அந்த யுத்தம் மூலம் தமிழர்களுக்கு விடுதலை பெற்றுத் தரப்பட்டுள்ளது.... இந்த எண்ணங்களை மக்கள் மனத்தில் விதைத்து விட்டால் சந்திரிகா வெற்றி பெற்றவராவார்.

# Sri Athi Rudra Maha Yaaga Committee

"Veda Bavanam" O.A. 3/1, Madras Road,
Kumbakonam - 612 002. Phone : 23416

## ஸ்ரீ அதிருத்ர மஹாயாக ஆஹ்வான அழைப்பிதழ்

நிகழும் ஸ்ரீ யுவ வருடம் கார்த்திகை மாதம் 21-ம் தேதி 7.12.1995 வியாழக் கிழமை முதல் தொடங்கி கார்த்திகை மாதம் 27-ம் தேதி 13.12.1995 புதன் கிழமை முடிய 7 நாட்கள் ஸ்ரீ அதிருத்ர மஹாயாகம் கும்பகோணத்தில் சங்கர மடத்தில் அதிவிமரிசையாக நடக்க இருக்கிறது.

உலக நலனை கருதியும், ஒவ்வொருவரின் குடும்ப நலனை கருதியும் இம்மகத்தான யக்ஞத்தை சேங்காலிபுரம் உபன்யாஸ சக்ரவர்த்தி ப்ரும்மஸ்ரீ என். ராமதீக்ஷிதர் அவர்களும், அவருடைய குமாரர்கள் ப்ரும்மஸ்ரீ வி. ஆர். ஸ்ரீதர தீக்ஷிதர் அவர்களும், விட்டல்தாஸன் ப்ரும்மஸ்ரீ ஆர். ஜயகிருஷ்ண தீக்ஷிதர் அவர்களும் நடத்த இருக்கிறார்கள்.

ஸ்ரீ அதிருத்ர மகாயக்ஞத்தில் கலந்து கொள்ளும் பக்தர்களுக்கு சகல பாக்யங்களும் கிட்டும் என்பதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை. இதில் கலந்து கொள்ளும் பக்தர்களுக்கு மன அமைதி, குடும்ப ஒற்றுமை, புத்ரலாபம், விவாஹபாக்யம், உத்யோகலாபம், ராஜாங்க அனுகூலம், இன்னும் ஏராளமான சகல சம்பத்துகளும் ஏற்படும். இந்த மகாபெரிய யக்ஞத்தில் ஒரு அபூர்வமான ரக்ஷை ஒன்று 7 நாட்களும் பூஜையில் வைக்கப்பட்டு வேண்டும் அன்பர்களுக்கு கொடுக்க இருக்கிறார்கள். மகா சக்தியுள்ள இந்த ரக்ஷை ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்க வேண்டிய ஒன்றாகும். நினைத்த காரியங்கள் தடை இல்லாமல் நடக்க இந்த் ரக்ஷை மிகவும் உபயோகமாக இருக்கும். குறைந்த அளவே ரக்ஷை பூஜையில் வைக்கப்பட உள்ளதால் பக்தர்கள் முன்கூட்டியே தங்கள் பெயர், நக்ஷத்ரம், கூடிய விவரங்களை கீழ்க்கண்ட முகவரிக்கு தெரிவிக்க கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடை விவரமும், அனுப்ப வேண்டிய முகவரியும்

| | ரூ. பை. |
|---|---|
| 1. 11 கணத்திற்கு (121 வேதவிற்பன்னர்கள்) ஒரு தினத்திற்கு | 50,000.00 |
| 2. ரித்விக் வஸ்த்ர தானம் (150 பேருக்கு) | 45,000.00 |
| 3. ஒருநாள் சந்தர்ப்பணை (அன்னதானம்) | 10,000.00 |
| 4. பூர்வாங்கதக்ஷிணை | 5,000.00 |
| 5. உத்தராங்கதக்ஷிணை | 5,000.00 |
| 6. கோதானம் ஒன்றுக்கு (மொத்தம் 36 கோதானம் தேவை) | 6,000.00 |
| 7. 11 பேர் கொண்ட ஒரு கணத்திற்கு ஸ்ரீ ருத்ர ஏகாதசினியின் பயன்பெற | 3,000.00 |
| 8. ஒருநாள் புத்த தக்ஷிணை | 1,000.00 |
| 9. 7 தினங்கள் பூஜையில் வைக்கப்பட்ட மகாசக்தியுள்ள ரக்ஷை | 2,000.00 |

எஸ்.பி. பாலு
சேர்மன்
ஸ்ரீ அதிருத்ர மஹாயாக கமிட்டி.

# தலைவர்களின் தனி ஆவர்த்தனங்கள்

**தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில் அரசியல் சிந்தனையில் மூழ்கிக் கிடக்கும் அரசியல்வாதிகள் சிலரை கச்சேரிகளுக்குத் தலைமை தாங்க அழைத்தால்...**

சத்யா

**கருணாநிதி**

நான் மூன்றாவது படிக்கும்போது இந்தி வாத்தியாருக்கு எதிர்ப்பு தெரிவித்து பாடித்தான் என்னுடைய பொது வாழ்க்கையைத் துவக்கினேன். எனது பாடலைக் கேட்டுப் பயந்து, அவர் தலை தெறிக்க ஓடியபோதுதான் இசைக் கலையால் இந்தித் திணிப்பைத் தடுக்க முடியும் என் பதை உணர்ந்து கொண்டேன்.

இன்றைய தினம் இலங்கைத் தமிழர்களின் சோக கீதம் மத்திய மாநில அரசுகளின் காதுகளில் விழாதது ஏன் என்பது தான் எனக்குப் புரியவில்லை. ஈழத் தமிழர்கள் தங்களுக்கென்று தனிமேடை கோருகிறார்கள். அது தவறா தவறில்லையா என்ற பிரச்னைக்கு நான் போக விரும்பவில்லை. தனி மேடையோ, தன் மேடையோ, நல்லபடியாக இலங்கைத் தமிழர்களின் வாழ்க்கைக் கச்சேரி அமைய வேண்டும் என்பது தான் என் விருப்பம். அமையாவிட்டால் அதற்காகக் கண்ணீர் சிந்தவும் தயாராக இருக்கிறேன்.

அருமைத் தம்பி பிரபாகரன், தனது இசைக்கு இடைஞ்சல் என்று கருதி, சக கலைஞர்கள் சிலரைக் கொன்றிருக்கலாம். அது ஓரளவுக்குத் தவறுதான். தம்பி பிரபாகரனின் தனி மேடை லட்சியத்தை ஒரு காலத்தில் நான் ஆதரித்ததாகக் கூறுகிறார்கள். இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம்.

ஆனால், தமிழகத்தில் என் கச்சேரி நடந்துவிடக் கூடாது என்று, என் காலடியில் உட்கார்ந்து தவில் வாசித்த சில துரோகிகள் திட்டமிட்டதாக எனக்கு தகவல் கிடைத்த பிறகும் அவர்களை என் குழுவில் எப்படி வைத்திருக்க முடியும்?

இன்றைய தினம் வெறும் ஜால்ராக்களை மட்டுமே வைத்துக் கொண்டு லாவணி பாடுகிறார் ஒரு பெண் மணி. உடன் இன்னொரு பெண்மணி. ஒருவர் குரல் கொடுக்க, மற்றவர் வாயசைக்கிறார். எவ்வளவு தாளம் போட்டாலும் அவர்களுக்கு ரசிகர்களின் ஆதரவு கிட்டப் போவதில்லை. அவர்கள் பாட்டைக் கேட்க ஆளே இல்லாத அவல நிலை ஏற்பட்டிருப்பதை விரைவில் உணரத்தான் போகிறார்கள்.

**குமரி அனந்தன்**

காங்கிரஸ் பேரியக்கத்துக்கும் இசைக்கும் எப்போதுமே





# மினி அரங்கு: மேக்ஸி கூட்டம்!

கச்சேரிகளை நடத்தும் அமைப்பு, தியாகராஜ சேவா சமிதி. தொழிலதிபர் பி.ஒபுல்ரெட்டி, வெகு நாட்களாகத் திட்டமிட்டு, கடந்த ஆகஸ்ட் 15ஆம் தேதி துவக்கி வைத்த அமைப்பு. மியூசிக் அகடமியின் மினி ஹாலில் நடைபெறுவதால், ஆறரை மணிக் கச்சேரிக்கு ஆறு மணிக்கே போய் உட்கார்ந்தால்தான் சீட் நிச்சயம்.

கச்சேரி என்னவோ வழக்கமான பாணிதான். ஆனால் முழுக்க முழுக்க தியாகராஜரின் கிருதிகள் மட்டுமே. ஹாலில் நுழையுமுன், அன்றைய நிகழ்ச்சியில் எந்த எந்தக் கீர்த்தனைகளைப் பாடப் போகிறார்களோ, அவற்றை ஆங்கில மொழிபெயர்ப்புடன் அழகாக அச்சிட்டுக் கையில் கொடுத்து விடுகிறார்கள். ஒட்டு மொத்தமான மொழிபெயர்ப்பு அல்ல; பல்லவி, அநுபல்லவி, சரணம் என்று தனித்தனியாக. [கச்சேரிக்கு இடையே பேப்பர் புரட்டும் சலசலப்பு கேட்கத்தான் செய்யும்!] ஆங்கில மொழி பெயர்ப்பைச் செய்திருப்பவர் 'ஹிந்து' உதவி ஆசிரியர்களில் ஒருவரும், சங்கீத விமரிசகருமான எஸ்.வி.கே.

* ஒபுல்ரெட்டி

– நம்பி

நெருங்கிய தொடர்பு உண்டு. நீரர் சத்திய மூர்த்திக்கு நன்றாகவே சங்கீதம் தெரியும். பெருந்தலைவர் காமராஜர் 'ஆகட்டும் பார்க்கலாம்' என்று சொல்வதே தேனிசையாகக் காதில் பாயும். ஏன், நமது பாரதப் பிரதமர் நரசிம்மராவ் எவ்வளவு சிறந்த வித்வான்! வாயைத் திறந்துதான் பாடவேண்டும் என்ற மரபையே முறியடித்தவரல்லவா அவர்! அவருடைய கோஷ்டி கானத்துக்கு ஆரம்பத்தில் போதுமான ஆட்கள் இல்லை. ஆனாலும் கண்ணன் குழலோசைக்கு ஆவினங்கள் அடிமைப் பட்டதுபோல் இவரது பதவி ராகத்துக்குக் கட்டுண்டு அஜீத்சிங் கோஷ்டி வந்து சேர்ந்து கொண்டது.

இன்றைய தினம், தமிழக முதல்வர் தலைமை தாங்க வருகிறார் என்பதற்காக வைரத்தாலே வாத்தியக் கருவிகள் தயாரித்து தங்கத்தாலேயே மேடை போட்டு வருகிற காட்சியைப் பார்க்கிறோம். நாமோ குருவி போல் நிதி சேர்க்கிறோம். அங்கே அருவிபோல் பணம் கொட்டுகிறது!

அருமை நண்பர் ரஜினி தனிக்கச்சேரி ஆரம்பித்தாலும் சரி, இணைக்கச்சேரி நடத்தினாலும் சரி, அவரது பாட்டுக்குத் தாளம் போட காங்கிரஸ் தயாராக இருக்கிறது. அவரது கச்சேரியை வெற்றிபெற வைப்பது காங்கிரஸ் ரசிகர்களின் பொறுப்பு. இதற்குப் பிரதமரும் தெரிவிக்கவில்லை மறுப்பு.

**ஜெயலலிதா**

இந்தக் கச்சேரியிலே உரையாற்றும் வாய்ப்பு கிடைத்தமைக்காக நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். சிறு வயதிலேயே சங்கீதம் பயிலவேண்டும் என்று நான் மிகவும் விரும்பினேன். நான் சட்டசபையில் பேசும் போது ஒவ்வொரு வினாடியும் உறுப்பினர்கள் மேஜை மீது தட்டுகிற அந்தத் தாளலயம் எனக்கு மிகவும் பிடிக்கும். எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அபஸ்வரமாகப் பேசுவதாகத் தோன்றினால் அவர்களை உடனே வெளியேற்றி விடுவதுகூட சங்கீதத்தின் மீது எனக்குள்ள பற்றின் காரணமாகத்தான்.

டெல்லியிலே ஒருவர் உட்கார்ந்த இடத்திலேயே கச்சேரி நடத்திக் கொண்டிருக்கிறார்.(பிரதமரைத்தான் ஜெயலலிதா தாக்குகிறார் என்பதைப் புரிந்து கொண்டு தங்கபாலு உற்சாகமாகக் கைதட்டுகிறார்) அவருக்கு சிறிதாவது சங்கீதப்பற்று இருந்திருந்தால் இங்கே என் பேச்சைக் கேட்க வந்திருப்பார். இதிலிருந்தே அவரது இசை ஞானம் தெரியவில்லையா?

தமிழகக் கச்சேரிகளில் எவ்வளவு வசூல் ஆகிறது என்று தெரிந்து கொள்ள நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு அலையும் அதிகாரிகள், ஹர்ஷத்மேத்தாவின் வசூல் பற்றி வாய் திறக்காதது ஏன்?

எனது உடன் பிறவாத சகோதரி சசிகலாவின் பெரியம்மாவின் பேத்தியை தமிழக அரசே ஆஸ்தான பாடகியாகத் தேர்ந்தெடுக்கவிருக்கிறது என்ற மகிழ்ச்சியான செய்தியை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

**வை. கோபால்சாமி**

தனக்கு அடுத்தபடியாகத் தன் மகன்தான் பாட வேண்டும் என்று நினைத்தார் கலைஞர். அதற்காகவா அத்தனை நாள் நான் அங்கே ஜால்ரா வாசித்தேன்? இதை ஏற்காததால் என்னை மேடையிலிருந்து கீழே தள்ளி விட்டார். அதைவிட மிருதங்கத்தை அடிப்பது போல் என்னை அடித்திருந்தால் 'கூட நான் வருந்தியிருக்க மாட்டேன்.

இன்றைய தினம் அவர் பாட்டிலே இசை இல்லை. வசைதான் இருக்கிறது. லயம் இல்லை. பயம்தான் இருக்கிறது.

அங்கே ஈழத் தமிழன் பாட முடியாமல் ஊரை விட்டே ஓடிக் கொண்டிருக்கிறான். ஆனால், ஈழம் எரியும்போது நீரோ மன்னன் போல் பிடில் வாசித்துக் கொண்டிருக்கிறார்கள் நரசிம்மராவும் ஜெயலலிதாவும். இதுவா சங்கீதம்?

## இந்த வருஷம் என்ன ஸ்பெஷல்?

டிசம்பர் சங்கீத சீஸன் இந்த வருடம் நவம்பர் கடைசியிலேயே தொடங்கிவிட்டது. ஹரிபிரசாத் சௌராசியா, மாண்டலின் சீனிவாஸ், பாலமுரளி கிருஷ்ணா என்று மூன்று நாட்களும் படிக்கட்டுகளில் கூட உட்கார்ந்து கேட்கும் அளவுக்குக் கூட்டத்தை வரவழைத்த ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்ஸின் 'கலா உத்ஸவ்,' வரப்போகிற சங்கீத சீசனுக்குக் கட்டியம் கூறுவதுபோல அமைந்தது. கல்கத்தாவில் உள்ள ஐ.டி.சி.யின் சங்கீத் ரிஸர்ச் அகடமி போலவே, சென்னையில் ஒரு பயிற்சிக்கூடம் அமைக்கப் போகிறார்களாம். ஆசிரியர்களுக்குக் கை நிறையச் சம்பளமும் மாணவ-மாணவிகளுக்கு ஸ்டைஃபண்டும் உண்டாம். இனி. வருடா வருடம் கலா உத்ஸவ் தொடருமாம்; மகிழ்ச்சி.

மியூசிக் அகடமியில் ஜேசுதாஸ் இந்த வருடம் பாடுகிறார். ரொம்ப வருஷங்களுக்கு அப்புறம் குன்னக்குடியும் இங்கே வாசிக்கப் போகிறார்! இந்த வருடம் 12 மணிக் கச்சேரிகளில் 60 சதவிகிதம் புதுமுகங்களாம். பிற்பகல் கச்சேரிகளில் இளைய தலைமுறைக்கு ஒட்டுமொத்த ப்ரமோஷன் கொடுத்து விட்டார்கள். (சென்ற வருட 'கல்கி' அட்டைப்படக் கட்டுரை நினைவுக்கு வருகிறதோ?) ஃப்ளாரிடா யூனிவர்சிடியிலிருந்து வசுதா நாராயணன், ஹவாயிலிருந்து காயத்ரி ராஜாபுர்கசேபம், அயோவா பல்கலைக் கழகத்திலிருந்து பேராசிரியர் மார்ட்டின் ஜெனி என்று அயல் நாட்டு இறக்குமதிகளும் உண்டு. திருவள்ளுவர் பற்றி ஹரிகதையை தமிழில் கிரிஜா ராமசாமி நிகழ்த்தப் போகிறார்.

கிருஷ்ணகான சபாவில் கச்சேரிகள் எ


• ஆர்.கே. ஸ்ரீகண்டன்


• ரமணி

• சிட்டி பாபு

# இளைஞர்களுக்கு ப்ரமோஷன்!

# சான்மேக்

## "மேலும் பாதுகாப்பானது" என்ற சான்றைப் பெறுகிறது.

— ஆறே மாதங்களில் —

**CARE A (FD)**

மதிப்பீடு




ஆக

— உயர்ந்துள்ளது. —

SMF

**SANMAC MOTOR FINANCE LIMITED**

HIRE PURCHASE • LEASING • PUBLIC DEPOSITS
OTCEI • PROPERTY DEVELOPMENT

கார்ப்பரேட் அலுவலகம்: "JVL" பிளாசா. 501, அண்ணா சாலை தேனாம்பேட்டை, சென்னை 600 018. தொலைபேசி: 4349508, 4349805, 4349678. பேக்ஸ்: 4343305.

பதிவு அலுவலகம்: 14, கே. என். கே. ரோடு, சென்னை 600 006. தொலைபேசி: 8250601.

கிளைகள்: சென்னை: அண்ணா நகர் மேற்கு ✆ 6214454. அண்ணா சாலை ✆ 8520921. அசோக் நகர் ✆ 4824525, 4824624. மயிலாப்பூர் ✆ 8258637, 8251232, 4992488. புரசைவாக்கம் ✆ 6425036. தி. நகர் ✆ 8278515 மேற்கு தாம்பரம் ✆ 2366327. கோயம்புத்தூர் ✆ 446375. கடலூர் ✆ 22728. கும்பகோணம் ✆ 24844. மதுரை ✆ 543334. நெய்வேலி ✆ 22984. சேலம் ✆ 446607. திருநெல்வேலி ✆ 322032. திருவண்ணாமலை ✆ 22922, 23333. திருச்சி ✆ 25324. சிதம்பரம் ✆ 20238. வேலூர், பெங்களூர் ✆ 5583856. மங்களூர் ✆ 428114. பாண்டிச்சேரி ✆ 37779. திருப்பதி ✆ 24376. விசாகப்பட்டினம் ✆ 545854. ஐதராபாத் ✆ 397879. நியூ டெல்லி ✆ 5618257. பம்பாய் ✆ 8918174 கொச்சி ✆ 366221.

SRICHAKRA COMS. 74695.

லாம் வழக்கம் போல. ஆனால் காலை நேர நாட்டிய கலா கான்ஃபரன்ஸில், ஆண்கள் நடனத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து நிகழ்ச்சிகளை எல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இங்கேயும், ஸ்பெயினிலிருந்து க்ளோரியா மாண்டலிக், ஷிகாகோவிலிருந்து டாக்டர் ஜோன் எர்ட்மேன் போன்ற இறக்குமதி ஐட்டங்கள் உண்டு. (உதயசங்கரின் 'கல்பனா' படம் பார்க்காதவர்கள் கண்டுகளிக்க, படத்தையும் திரையிடுகிறார்கள்)

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடியில் காலை பத்தரை மணி நிகழ்ச்சியாக, நந்தினி ரமணியின் சிஷ்யைகள் ஜெனட் ஓஷேயும் சுஷ்மா நந்தினியும் பரதநாட்டியம்–மேற்கத்திய பாலே பாத்திரங்கள் பற்றி ஒரு சுவாரசியமான லெக்-டெம் செய்யப் போகிறார்களாம். ஹரிகதையின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கல்யாணபுரம் ஆராவமுதனின் நிகழ்ச்சி, வளர்ந்து வரும் அவரது ரசிகர் கூட்டத்துக்கு மகிழ்ச்சி தரும். பிற்பகல் கச்சேரிகளில் லதா ராம்சந்த், எஸ். காயத்ரி, விஜயலட்சுமி சுப்பிரமணியம், சுமித்ரா நிதின் குறிப்பிடத்தக்கவை.

கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸின் இரண்டு முக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்று பண்டிட் சிவகுமார் சர்மாவின் சந்தூர். இன்னொன்று ரவிசங்கரின் சீடர் (அமெரிக்காவிலிருந்து வந்து) சிதார் வாசிக்கப்போகிறார். பெயர் : கார்த்திக் சேஷாத்திரி. காலை நேர நிகழ்ச்சிகளில் தினமும் சொற்பொழிவு.

மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸில் வீணை சிட்டிபாபுவுக்கு 'சங்கீத கலா நிபுண' விருது கொடுக்கிறார்கள். சபை நிறைந்த கச்சேரிகளுக்குப் பெயர் போனது மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ். இந்த வருடமும் அது பொய்க்காது என்றே தெரிகிறது.

மியூஸிக் அகடமியில் 'சங்கீத கலாநிதி' விருது பெறுபவர் ஆர்.கே. ஸ்ரீகண்டன். ராகத்தைத் துல்லியமாகப் பாடுவதிலும், அதிகம் பிரபலமாகாத கிருதிகளையும், பிரபலமான கிருதிகளையும் சமமாகப் பாடுவதிலும், கச்சிதமான நிரவலிலும், கைதேர்ந்தவர் ஸ்ரீகண்டன். ஏராளமான சாகித்தியங்கள் மனப்பாடம். சீடர்கள் நிறைய. அதுபோலவே, பெற்றிருக்கும் பட்டங்களும், விருதுகளும் எக்கச்சக்கம்.

நுங்கம்பாக்கம் கல்சுரல் அகடமி கூட விருது வழங்கத் தொடங்கிவிட்டது. ஃப்ளூட் ரமணிக்கு சங்கீத கலாசிரோமணி, சுதாராணி ரகுபதிக்கு நிருத்ய கலா சிரோமணி; பூர்ணம் விசுவநாதனுக்கு நாடக கலா சிரோமணி.

கூட்டம் சேருவதற்கு ரசிகர்கள் வரும்பட்சத்தில், எல்லாருக்கும் இனி ரசிக கலா சிரோமணி பட்டமும் கொடுத்துவிடலாம்?

- சாருகேசி

# 'இன்டர்போலுடன்

**சி.வி. நரசிம்மன்**

பிரான்ஸ் நாட்டுக் காவல் துறைக்கு ஒரு வகையில் உலகமே நன்றி சொல்ல வேண்டும். அந்த எண்ணம் அவர்களுக்கு எப்படித் தோன்றியது என்று தெரியவில்லை. ரொம்பப் பிரமாதமான ஐடியா அது! உலகம் முழுவதிலுமுள்ள நட்பை விரும்பும் நாடுகளின் காவல் துறையினர் ஒன்றிணைந்து, ஒரு வாலண்டரி சர்வீஸ் போல, வழக்குகளில் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளலாமே என்று யோசித்தார்கள். இதற்கு சட்டமெல்லாம் கிடையாது. பரஸ்பர நட்பு, உதவி மனப்பான்மையின் அடிப்படையில் இயங்கக் கூடியதாக அந்த அமைப்பு அமைய வேண்டும் என்று கருதினார்கள். 'சர்வதேசக் குற்றவியல் காவலர் அமைப்பு' (International Criminal Police Organisation — ICPO) 1914 ஆம் ஆண்டு உதயமாயிற்று. இதைத்தான் INTERPOL என்று சுருக்கமாகச் சொல்லுவார்கள்.

இந்தியா உட்பட, இன்று ஏறக்குறைய நூறு நாடுகளை உறுப்பினர்களாகக் கொண்ட INTERPOL-ன் தலைமை அகம் பாரீஸில் உள்ளது. அது தன் உறுப்பு நாடுகளில் நடக்கும் குற்றங்களை உன்னிப்பாகக் கவனித்து, விரிவான ரெக்கார்டுகளைத் தயார் செய்கிறது. இதன் மூலம் ஒரு குற்றம் ஏன், எதனால், எப்படி நடக்கிறது, அது எவ்வாறு துப்பறியப்படுகிறது, எந்த வகைக் குற்றங்களுக்கு என்னென்ன விதமான தண்டனைகள் வழங்கப்படுகின்றன என்பதை எல்லா நாடுகளும் தெரிந்து கொள்ள முடிகிறது.

இன்டர் போலில் அங்கத்தினராக உள்ள ஒவ்வொரு நாடும், தன் பிரதிநிதியாக ஒரு அமைப்பை இன்டர் போலுக்கு 'நாமினேட்' செய்யும். வருடம் தோறும் நடக்கும் இன்டர்போல் மாநாட்டுக்கு இந்த அமைப்பின் தலைவர் சென்று கலந்து கொள்வார்.

கடத்தல் உள்ளிட்ட, ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் சென்று குந்தகம் விளைவிக்கக் கூடிய குற்றங்கள், அவற்றைத் தடுப்பதற்கான வழிமுறைகள் பற்றி அங்கே கூடி விவாதிப்பார்கள்.

பொருளாதாரக் குற்றங்கள் என்று சொல்லப்படும் வரி ஏய்ப்பு, அந்நிய செலாவணி மோசடி, ஏற்றுமதி-இறக்குமதி ஊழல் போன்றவற்றைத் தடுக்க இன்டர்போலின் ஒத்துழைப்பு இன்றியமையாதது!

உதாரணமாக, இந்தியாவிலிருந்து பிரான்ஸ் நாட்டுக்கு ஏதோ ஒரு பொருள் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்படுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம்.

இதில், கணக்கில் வராத, 'வரிகளுக்கு அப்பாற்பட்ட' பெருமளவு அந்நியச் செலாவணியை கறுப்புப் பணமாக இங்குள்ள ஏற்றுமதியாளர் வெளிநாட்டில் சேர்த்து வைத்துள்ளார் என்ற குற்றச்சாட்டு வந்தால், இங்கே கேஸ் பதிவு செய்து கொள்வார்கள்.

ஆனால் வழக்கை விசாரிக்க, வலுவான ஆதாரங்கள் வேண்டுமே? குறிப்பிட்ட அந்த பிரான்ஸ் நாட்டுக் கம்பெனி தொடர்பான விவரங்கள், ஊழலின் ரிஷிமூலம், நதி மூலம் பற்றியெல்லாம் தெரிய வேண்டுமென்றால் அந்நாட்டு அரசின் உதவி இல்லாமல் முடியாது!

நம் ஊர் போலீஸ் அல்லது ஊழல் ஒழிப்புத் துறை நேரடியாக பிரான்ஸ் அரசுடன் தொடர்பு கொண்டு விவரம் சேகரிப்பது நடவாத காரியம்.

ஆக, இந்த வகையில் 'இன்டர் போலி'ன் உதவி தவிர்க்க முடியாததாகிறது.

இன்டர்போலின் இந்தியப் பிரதிநிதி அமைப்பு - சி.பி.ஐ. ஆகவே கேஸ் சி.பி.ஐயின் கைக்கு வரும். அல்லது, மாநில அரசு, விவரங்கள் சேகரிப்பில் மட்டும் சி.பி.ஐ.யின் உதவியைக் கேட்டுப் பெறும்.

வழக்கை ஒப்புக் கொண்ட சி.பி.ஐ., முதலில் வழக்கு பற்றிய முழு விவரங்களைக் கேட்டு அறிந்து கொண்டு, ஒரு விரிவான ரிப்போர்ட் தயார் செய்யும். அதுவரை நடந்த புலனாய்வு பற்றிய விவரங்களைக் குறிப்பிட்டு, அந்த நாட்டிலிருந்து, இந்த வழக்கு தொடர்பாக என்னென்ன விவரங்கள் எதிர்பார்க்கப்படுகின்றன என்பதையும் எழுதி, இன்டர் போல் வழியாக பிரான்ஸ் அரசுக்கு அனுப்பும்.

இதில் குறிப்பிட வேண்டிய விவகாரம் என்னவென்றால், இன்டர் போல் மூலம் விசாரித்தாலும் நேரடியாக, சுலபமாகக் கிடைக்கக் கூடிய ரெக்கார்டுகள், புள்ளி விவரங்கள் மட்டுமே அங்கிருந்து கிடைக்குமே தவிர, சம்பந்தப்பட்ட ஊழல் நடந்ததாகச் சொல்லப்படுகிற இடத்தில் (நிறுவனத்தில்) அதிரடி சோதனையோ, கைதோ செய்ய முடியாது. அது நட்பு முறையில் செய்யக் கூடியது அல்ல. அந்நாட்டுச் சட்டத்தின்




• ஸ்டாக்ஹோம் இன்டர்போல் மாநாடு - 1977

# ஒரு பேரம்!

வழியாகத்தான் செய்ய வேண்டும்.

சற்று நுட்பமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் இது. ஒரு நாட்டில் 'குற்றம்' என்று கருதப்படுகிற ஒரு செயல், இன்னொரு நாட்டில் 'பெரிய விஷயமே இல்லை' என்று கூட சொல்லிவிடப் படலாம்.

உதாரணமாக, வரி ஏய்ப்பு என்பது நம் நாட்டுச் சட்டப்படி ஒரு கிரிமினல் குற்றம். இதுவே வேறு சில நாடுகளில் கிரிமினல் குற்றமே இல்லை! அங்கே வெறும் சிவில் விவகாரமாகக் கருதப்படும். நம் நாட்டில் துப்பாக்கி வைத்துக் கொள்வதற்கு லைசென்ஸ் வேண்டும். லைசன்ஸ் இல்லாமல் துப்பாக்கிகளை வாங்குவதோ, விற்பதோ, இறக்குமதி செய்வதோ மிகப் பெரிய குற்றமாகும். ஆனால் வேறு சில நாடுகளில் துப்பாக்கி சம்பந்தப்பட்ட இந்தச் செய்கைகள் குற்றமாகக் கருதப்படுவதில்லை...

எதற்கு இத்தனை விரிவாகச் சொல்கிறேன் என்றால், நாம் குற்றம் என்று கருதும் ஒரு செயல், அது சம்பந்தப்பட்ட இன்னொரு நாட்டிலும் குற்றமாகக் கருதப்பட்டால்தான் இன்டர்போல் மூலம் உதவி பெற முடியும்!

இந்த ரகச் சிக்கலில்தான் போபர்ஸ் பீரங்கி கேஸ் மாட்டிக் கொண்டிருக்கிறது; இழுத்தடிக்கிறது. நாம் கேட்கும் ஒவ்வொரு விவரங்களையும் அந்நாட்டுக் கோர்ட்டில், மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஒவ்வொன்றாக விளக்கிச் சொல்லி, விவரங்கள் பெற வேண்டி உள்ளது. அதனால்தான் வழக்கு முடியக் கால தாமதமாகிறது. தவிரவும் குறிப்பிட்ட இந்த விவகாரம், 'வங்கி' சம்பந்தப்பட்டதென்பதால் விளக்கங்கள் பெறுவது சிரமமாக உள்ளது. ஏனெனில் வங்கிகளின் சட்டம், பாதுகாப்பு எல்லாம் மிக உயரிய தரத்திலானவை. அத்தனை சுலபத்தில் அணுக முடியாது.

இது போன்ற பிரச்னைகளைப் பேசித் தீர்க்கவும், பரஸ்பரம் நாடுகளுக்கிடையே உதவிகளை வலுப்படுத்தவும்தான் நான் முதலில் குறிப்பிட்ட வருடாந்தர இன்டர்போல் கான்ஃபரன்ஸ் நடக்கிறது.

தவிர, பர்சனலாக ஒவ்வொரு நாட்டின் இன்டர்போல் பிரதிநிதியையும் நேரில் சந்தித்து, பழகி, தெரிந்து கொள்வதென்பது நம் வழக்குகளின் வெளிநாட்டு விசாரணைகளுக்கு மிகவும் உகந்தது. நன்கு பழகிய நண்பர்களோடு ஒரு டெலிபோன் மூலம் கேஸை முடுக்கி, முடித்து விடலாமே!

## 1977.

நான் சி.பி.ஐ.யின் இயக்குநராக இருந்த சமயம், அப்படியொரு இன்டர் போல் கான்ஃபரன்ஸ், ஸ்டாக்ஹோமில்

கோவை மாவட்டம் காரமடை என்ற ஊரில் காவல் நிலையத்தில் பணிபுரியும் ஒரு போலீஸ்காரரின் பெயர், வேட்டை! ஆம்! அவரது பெயரே வேட்டைதான்!!

தகவல் : உடுமலை
எஸ். பொன்னுசாமி

(ஸ்வீடன்) நடந்தது. அதற்குச் சற்று முன்பாக பாரிஸில் ஒரு சிறிய மீட்டிங்.

இந்த இரண்டிலும் கலந்து கொள்வதற்காக இந்தியாவின் பிரதிநிதியாக நான் போயிருந்தேன். 15-20 நாட்கள், உலகப் புலனாய்வு மேதைகள் அத்தனை பேருடனும் பழகக் கிடைத்த அந்த வாய்ப்பு, மறக்க முடியாதது!

அந்த ஸ்டாக்ஹோம் கான்ஃபரன்ஸில் நான் கலந்து கொண்ட முதல் நாளே ஒரு சுவாரஸ்யமான சம்பவம் நடந்தது.

'இன்டர்போல்' அமைப்பின் 'நிர்வாகக் கமிட்டி' அமைப்பது தொடர்பான சில சட்டத் திருத்தங்கள் கொண்டு வர, அன்று காலை ஒரு 'செஷன்' கூட்டியிருந்தார்கள்.

உலக நாடுகளை ஐந்து கண்டங்களாகப் பிரித்து, எல்லாக் கண்டங்களிலிருந்தும் குறைந்தது ஒரு பிரதிநிதியாவது அந்தக் குழுவில் இடம் பெற வேண்டும் என்பது இன்டர்போலின் விதிமுறை.

இந்த விதிமுறைகளில் சில மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டு அனுப்பிய 'பேப்பர்'களை நான் மேலோட்டமாகப் பார்த்துக் கொண்டு வந்தேன். தற்செயலாக ஒரு விஷயம் கண்ணில் பட்டது. அதில் குறிப்பிட்டபடி கமிட்டி அமைத்தால், ஏதாவது ஒரு கட்டத்தில் ஆசியா அல்லது ஆப்ரிக்கா கண்டங்களுக்கான பிரதிநிதிகள் சேர்க்கப்படாமல் விடுபட்டுப் போய் விடுவதற்கான வழி இருப்பது தெரிந்தது.

பரஸ்பரம் நட்புறவான சூழ்நிலையில் அப்படி நேராமல் பார்த்துக் கொள்ளலாம் தான்! ஆனால் விதிமுறைகள்படி அவ்விரு கண்டங்களிலிருந்தும் கமிட்டிக்குப் பிரதிநிதிகளே இல்லாமல் போய்விடுமே!

நான் உடனே எழுந்து, மைக்கில் என் சந்தேகத்தைத் தெரிவித்து விட்டேன்! இந்த விதி மாற்றத்தை அனுமதிப்பது நல்லதல்ல என்று சொல்லி விட்டேன்.

உடனே கான்ஃபரன்ஸின் போக்கே ஒரு கணம் தடுமாறி, திசைமாறி விட்டது. ஆங்காங்கே சலசலப்பு எழுந்து விட, தலைவர் உடனடியாகப் பதினைந்து நிமிடங்களுக்குக் கூட்டத்தை ஒத்தி வைத்தார்!

தன் இருக்கையிலிருந்து எழுந்து என்னிடம் வந்தார். குறிப்பிட்ட அந்த விதி மாற்றத்தில் என்னென்ன திருத்தங்கள் செய்தால், பிரதிநிதித்துவம் சமமாகப் பிரித்தளிக்கப்படும் என்பதை விளக்கிச் சொன்னேன். அவர் ஏற்றுக் கொண்டார்!

பதினைந்து நிமிடங்களுக்குப் பின் மீண்டும் கூடிய அவையில் தலைவர், "நான் இந்தியப் பிரதிநிதி மிஸ்டர் நரசிம்மனுடன் பேசி, கொண்டு வரவிருந்த சட்டத்திருத்தத்தில் சில மாறுதல்கள் - அவர் ஒப்புதலுடன் செய்துள்ளேன். இப்போது அதை வோட்டெடுப்புக்கு விடுகிறேன்" என்று அறிவித்தார்.

வோட்டெடுப்பு நடந்து, அது ஏகமனதாக ஏற்கப்பட்டது!

இதன் எதிரொலி என்னவென்றால், அந்த கான்ஃபரன்ஸுக்கு வந்திருந்த ஆப்பிரிக்க நாடுகளின் பிரதிநிதிகள் மதிப்பில் நான் கிடுகிடுவென உயர்ந்து விட்டேன்!

கூட்டத்தின் அடுத்த 'செஷனு'க்கு அவர்கள் அத்தனை பேரும் எனக்கு ஆதரவு தெரிவித்து, வோட்டளித்ததால் நான் ஏகமனதாக அந்தக் கூட்டத்திற்கு சேர்மன் ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன்!

அந்த மாநாட்டில்தான் முதல் முதலில், 'பொருளாதாரக் குற்றங்களைக் கண்டுபிடிக்க இன்டர்போல் எவ்வாறு உதவ வேண்டும்' என்பது பற்றி ஆராய்ந்து முடிவெடுக்கப்பட்டது.

வளர்ச்சியடைந்த நாடுகளில், பணம் கொழித்த நாடுகளில் வரி ஏய்ப்பு போன்ற பொருளாதாரக் குற்றங்களைப் பெரிதாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள். ஆனால் நமக்கோ, தலைவலி தரும் விஷயம் அதுதான்!

இந்த நிலையில், 'அவர்கள் குற்றம் என்று கருதாத ஒரு விஷயத்தில், அவர்கள் ஒத்துழைப்பை நாம் பெற என்ன வழி' என்று யோசித்தேன். 'பேரம்' ஒன்றுதான் சரியானதாகப் பட்டது எனக்கு!

நான் சொன்னேன், "இதோ பாருங்கள்! எங்கள் நாட்டில் நடக்கும் பொருளாதாரக் குற்றங்களில் இன்டர்போல் உதவி அதிகம் தேவைப்படுகிறது. இதை நீங்கள் செய்ய முடியுமானால், உங்களது தலைபோகிற பிரச்னையான போதை கடத்தலில் நாங்கள் முழு மனத்துடன் உங்களுக்கு உதவ முடியும்!"

என் அணுகுமுறை அவர்களுக்குப் புரிந்து விட்டது! வேறு வழியின்றி ஏற்றுக் கொண்டார்கள்!

பொருளாதாரக் குற்றங்களில் பரஸ்பரம் உதவி புரிதல் தொடர்பான மிக முக்கியமான தீர்மானம் அப்போது நிறைவேறியது! இன்றளவும் நமக்குப் பேருதவி புரியும் இட்டம் அது!

(அடுத்த வா

● கந்தசாமி நாகம்மா இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.

? என்னால் இரண்டு பேர் நாத்திகர்களாக மாறியிருக்கிறார்கள்– என் மனைவியும் மகனும்– எனத் தம்பட்டம் அடித்துக் கொண்டிருக்கிறாரே சத்யராஜ்?

! மனைவியுடைய நம்பிக்கையைத் தகர்த்து அவரை மாறச் செய்வதில் என்ன பெருமை இருக்கிறது என்று தெரியவில்லை! தவிர, நம் நாட்டில் நூறு சதவிகிதம் ஆத்திகர்களும் கிடையாது; நூறு சதவிகிதம் நாத்திகர்களும் கிடையாது. நாத்திகம் பேசுவது இன்று ஒரு ஃபேஷன்! 'மனைவியின் எதிர்பாரா மரணத்தால், நான் இப்போது நாத்திகன் ஆகிவிட்டேன்' என்று பால்தாக்கரே கூறுவது போல!

● புளியமரை கணேசன், சென்னை – 30.

? இந்திய அணியில் நல்ல பாட்ஸ்மென் இருந்தும் நியூஜிலாந்துடைய 348ரன்களைத் துரத்தி முன்னேற முயற்சி செய்யவில்லையே... நொந்து போயிருக்கிறேன்; ஆறுதல் ப்ளீஸ்...

! சுவர் இடிந்து விழுந்ததில் ஒன்பது பேர் இறந்து போய்விட்டார்களே... அதில் நான் மேலும் நொந்து போயிருக்கிறேன்!

## சரத்குமாரின் திடீர் பல்டி?



• குறைஞ்சு போச்சு!

● ஏ. சுகுமார், காட்டுக்காளூர்.

? வரதட்சணை கொடுமைக்காக உலகின் இளம் டாக்டர் அம்பாடி கைது செய்யப்பட்டுள்ளது பற்றி...?

! டாக்டராவது சுலபம். மனிதனாவது தான் கஷ்டம்!

● வி.பி.காந்திமதி, மதுரை –16.

? ஜாபர் ஷெரீப் ராஜினாமா!

! இலாகா இல்லாத அமைச்சர் என்கிற முக்கியமான பதவியை அவருக்கு வழங்கியதன் மூலம் முதலில் பிரதமர் அப்பதவியைக் கொச்சைப்படுத்தினார். 'எந்தப் பொறுப்பும் இல்லாத அமைச்சர் என்ற நிலையில் தொடர்ந்து இருந்து அரசுப் பணத்தை வீணாக்க விரும்பவில்லை' என்று சொன்னதன் மூலம் ஷெரீப் அப்பதவியை மேலும் இழிவுபடுத்திவிட்டார். காரணம், ஜனநாயக மரபுகள்படி, இலாகா இல்லாத அமைச்சர் என்கிற பதவியின் முக்கியத்துவத்தை யாருமே சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதுதான்.

● என். சம்பத், மதுரை –10. □

? கிரிமினல் குற்றவாளிகளுக்கு ஆஜராகும் ராம் ஜெத்மலானி, புதிய கட்சி தொடங்குகிறாரே...?

! இன்றைய சூழலில் கிரிமினல்களே அரசியலில் மூலதனம் என்பதால், தமது வாதத் திறமையை நாடி வருபவர்களின் துணையுடனேயே அரசியல் கட்சி நடத்திவிடலாம் என்கிற தைரியமா? அல்லது இன்றைய அவலச் சூழ்நிலையைத் திருத்த முடியும் என்கிற நோக்கமா...? எப்படியானாலும் சரியான ஆசாமி அல்ல!

● டி.ஆர்.பாலசந்தர், திருநெல்வேலி – 6.

? டயானா–சார்ல்ஸ் பிரச்னை பற்றி...?

! பிரிட்டிஷ் அரச பரம்பரைக்கு என்று ஏற்பட்டுள்ள மரபுகள், காலத்துக்கு ஒவ்வாதவை. அவற்றை மாற்றி அமைப்பது அவசியம். சார்லஸ் – டயானா இருவருமே அவரவர் பாதையில் செல்வது தான் நல்லது. மன வேறுபாடும் கள்ளக் காதலும் இப்படி சந்தி சிரித்த பிறகு எதற்கு ஒட்டு வேலைகள்...?

● பா. ரஜினிராஜன், தாராபுரம்.

? ஐந்து ரூபாய் டிக்கெட்டை நூறு ரூபாய்க்குக் கள்ள மார்க்கெட்டில் விற்கும் ரஜினி ரசிகர்கள் மூலம் தூய ஆட்சியை ஏற்படுத்த முடியாது என செங்கோட்டையன் கூறியுள்ளாரே?

! ரஜினி ரசிகர்கள் அனைவருமே கள்ள மார்க்கெட்காரர்கள் என்ற முடிவு அபத்தம்; இத்தகைய அறிக்கைகள் ஆத்திரம் விளைவிக்கும் என்பது தவிர தனிப் பார்வைக்குத் தரப்பட்ட சினிமா காஸெட்டை

• மாற்றியவர்...





• ...மாறியவர்!

டி.வி. ஒளிபரப்புக்குப் பயன்படுத்துவது என்னும் பிரும்மாண்ட மோசடியைச் செய்பவர்களின் ஆட்சியில் தூய்மை என்ன, கொடி கட்டியா பறக்கும்!

● **என். சண்முகம், திருவண்ணாமலை.**

*? 'தமிழுக்காக கண்ணதாசனை மன்னித்த புரட்சித் தலைவரை மீண்டும் புரட்சித் தலைவி வடிவில் பார்க்கிறேன்' என்று காளிமுத்து பேசியுள்ளது குறித்து...?*

! இல்லாட்டிதான்! 'நைஸாக' கண்ணதாசன் லெவலுக்குத் தம்மைத் தாமே உயர்த்திக் கொண்டிருக்கிறாரே...!

● **என். குப்புசாமி, வெங்கிடாபுரம்.**

*? சரத்குமாரின் திடீர் பல்டி...?*

! சரியான நேரத்தில் எடுக்கப்பட்ட மிகச் சரியான முடிவு. ஆனால், 'நாட்டாமை' காஸெட் விவகாரம்தான் தூண்டுகோல் என்னும் போது, ஊர் எரிந்தால் தெரியவில்லை; தன் வீடு எரிந்தால்தான் உறைக்கிறது என்பது உறுதியாகிறது. ஒருமாத்து குறைஞ்சு போச்சுங்க...!

● **அவ்வை. கே. சஞ்சீவிபாரதி, அவ்வையார்பாளையம்.**

*? உலக அழகி ஜாக்குலின் அக்குவேரா மார்க்கன்னோ பத்தி...?*

! பேர் நல்லாருக்கு இல்லை..? மெது பகோடா மெல்லுறாப்பல...!

● **என். சி. ராஜேந்திரன், சின்ன சேலம்.**

*? அச்சம் என்பது எங்கள் அகராதியிலேயே கிடையாது என்று அமைச்சர் கண்ணப்பன் கூறியிருக்கிறாரே?*

! அது சரிதாங்க! இல்லாட்டி இத்தனை ஊழல், மோசடி குற்றச்சாட்டுகளுக்கு ஆளாவாங்களா என்ன...!

● **மேலை பழ. நாகப்பன், சென்னை – 41.**

*? இ. காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் திருச்சி இரண்டாவது தலைநகரமாகும் என்று மத்திய அமைச்சர் அருணாசலம் பேசினதைக் கேட்டீர்களா?*

! சரியான 'பேவகூஃபி' யோசனை! என்ன, அர்த்தம் புரியலையா?... அமைச்சர் பேசிய கூட்டத்தில் வெளியிடப்பட்ட ஹிந்தி-தமிழ்-ஆங்கில அகராதியைப் பார்க்க வேண்டியதுதான்!

● **ஜான்ரவி, கோவில்பட்டி.**

*? ஒவ்வொரு இடத்திலிருந்தும் வரும் பல்வேறு சுவையுடைய இளநீரை ஒன்று சேர்த்து, பதப்படுத்தி பாலிதீன் பைகளில் அடைக்கிறோம் என கு.ப. கிருஷ்ணன் கூறுகிறாரே?*

! அந்த அமுத பானத்தின் சுவை, தூய்மை, கட்டுப்படியாகக்கூடிய விலை ஆகிய மூன்றையும் ஒரே சீவாக சீவித் தள்ளும் அபத்தமான நடவடிக்கை. குளுகோஸ் drip கிடைக்காத சமயங்களில் இளநீரை நேரடியாக உடலுக்குள் செலுத்தி மனிதர்களைக் காப்பாற்ற முடியும். அந்த அளவுக்குத் தூய்மையான ஒரு பொருளை பாழ்பண்ணுவதற்கு வழி சொல்கிறார் விவசாய அமைச்சர்.

● **இரா. திலீப், திருச்சி – 14.**

*? சாய்பாபாவுக்குக் காணிக்கையாக இருநூறுகோடி ரூபாய் கிடைத்திருக்கிறதாமே?*

! அவருடைய அற்புதமான சமுதாயப் பணிகளுக்குக் கிடைத்துள்ள உலகளாவிய அங்கீகாரம்.

● **த. சங்கர், திண்டுக்கல் – 1.**

*? நாக்பூர் கிரிக்கெட் மாட்ச் தமது வெற்றி வாய்ப்பைக் குறைத்து விட்டதே!*

! நாக்பூர் பிட்ச் சரியான பாட்ஸ்மென் பிட்ச். டாஸை ஜெயித்த பிறகும் அதில் நியூஜியை முதலில் ஆடச் சொன்னது அறியாமையினாலா அல்லது மிதமிஞ்சிய தன்னம்பிக்கையினாலா தெரியவில்லை. எப்படியோ, அசாருக்கும் அடி சறுக்க, 2-2 என்று இந்தியாவும் நியூஜிலாந்தும் சமநிலை எட்ட, தொடர் பயங்கர டென்ஷன் ஏற்படுத்தி விட்டது. இதனாலேயே பம்பாய் வெற்றிக்கு இனிப்பு அதிகம்.



• உலகின் வந்தனம்



• கலப்பில்லை!



• சீவித் தள்ளுகிறார்!



• பேவகூஃபி யோசனை



• ஒட்டாது!

□ ரூ. 25 பரிசு பெறுபவர்:
என். சம்பத்,
'துவாரகா', பிளாட்:1, முதல் தெரு,
துரைசாமி நகர், மதுரை – 625 010



# நான் ஒரு டிபார்ட்மென்ட்டல் ஸ்டோர்!

**கலைமாமணி களேபரங்கள் எல்லாம் முடிந்து, பொன்னி ஹவுஸில் ஹாயாக உட்கார்ந்து இருந்தார் குன்னக்குடி வைத்தியநாதன். 'ம்யூஸிக் ஸ்பெஷலு'க்கு ஒரு பேட்டி என்றதும் உற்சாகமாக ஒப்புக் கொண்டார்.**

*'மற்ற வயலின்களுக்கும் நீங்கள் உபயோகிக்கும் வயலினுக்கும் சப்த வேறுபாடு நிறைய தெரிகிறது. ஸ்பெஷல் எஃபக்ட்டுக்காக ஏதும் ரகசியமாக* **'extra fitting'** *சேர்த்திருக்கிறீர்களா?*

'நிறைய பேர் கேட்கிறார்கள். அப்படி எந்த சிறப்புச் சேர்க்கையும் என் வயலினில் இல்லை என்று சொன்னால் நம்பமாட்டேன் என்கிறார்கள். வேண்டுமானால் என் வயலினை உங்களிடம் தருகிறேன். வேறு எந்த வித்வானிடம் வேண்டுமானாலும் காட்டி, செக் பண்ணி, சந்தேகம் தீர்த்துக் கொள்ளுங்கள்! 'கை மணம்' என்று சமையலில் ஒரு தியரி உண்டு. அது போலத் தான் இதுவும்."

**''உங்களுக்கு ஒரு பெரிய ரசிகர் கூட்டம் இருக்கிறது. நீங்கள் என்ன வாசித்தாலும் ரசிக்கிறார்கள். ஆனால், இசை விமர்சகர்கள் உங்களைப் பெரும்பாலும் ஒப்புக் கொள்வதில்லையே?''**

"ஒரு விஷயம். நான் விமர்சகர்களுக்காக வாசிப்பதில்லை. ரசிகர்களுக்காகத்தான். ரசனை என்பது ஆளுக்கு ஆள், இடத்துக்கு இடம் மாறுபடக் கூடிய விஷயம். சபாக்களில் வாசிப்பது போல மரபு சார்ந்து என்னால் பொது மேடைகளில் வாசிக்க முடியாது. ராக ஆலாபனை, நிரவல், ஸ்வரங்களையெல்லாம் விலாவாரியாக அங்கே வாசித்தால் எழுந்து போய் விடுவார்கள். கலைஞன் என்பவன் யார்? தன் கலையால் மக்களை சந்தோஷப் படுத்துபவன். அதாவது, மக்கள் சந்தோஷப்படும் விதமாகத் தன் கலையை உபயோகிக்கத் தெரிந்தவன். என்னைப் பொறுத்தவரை, யார், எதை விரும்பிக் கேட்டாலும் வாசிப்பேன். அது 'குருலேக'வாயினும் சரி; 'குச்சிகுச்சி ராக்கம்மா' வாயினும் சரி. என்னுடைய இந்த ஜனரஞ்சகப் போக்கு விமர்சகர்களுக்குப் பிடிக்காவிட்டால் நான் என்ன செய்ய முடியும் நான் ஒரு டிப்பார்ட்மென்ட்டல் ஸ்டோர் மாதிரி. கேட்பது கிடைக்கும். பிடித்ததை எடுத்துக் கொள்ளலாம்

**''வயலினில் நீங்கள் செய்யும் Gimmicks வேலைகளும் இந்த அடிப்படையில் தானா?''**

"Gimmicks பண்ணுவது ரொம்பக் கஷ்டம் தெரியுமா? அதுவும் வயலினில்! அசுரத்தனமான பயிற்சி வேண்டும் அதற்கு. பலர் முயன்று, முடியாமல் போன விஷயம் அது! முடியாது என்பதை முடியும்

# குன்னக்குடி பேட்டி

என்று செய்து காட்டுவதுதான் குன்னக்குடியின் ஸ்பெஷாலிட்டி! என் வயலின் பாடுவதோடு மட்டுமின்றி, பேசும், சிரிக்கும், அழும், துள்ளிக் குதிக்கும், என்னவும் செய்யும். அது, கடவுள் அருள். Gimmicks செய்வது சாதாரண விஷயமல்ல. அதே சமயம் சம்பிரதாய ரீதியிலும் என்னால் சிறப்பாக வாசிக்க முடியும்... ஒரு சம்பவம் சொல்கிறேன். சுப்புடு இருக்கிறாரே, எத்தனையோ வருடங்களாக என்னைக் கடுமையாக விமர்சித்து வந்தார். ஒருதரம் தமிழிசைச் சங்கத்தில் என் கச்சேரிக்கு வந்து இருந்தார். 'என்னென்னவோ செய்கிறீரே உங்கள் வயலினில்... ஒரு ஹிந்தோளத்தையும் வாசஸ்பதியையும் அப்படியே எடுத்துப் பிழிந்து எஸென்ஸ் தர முடியுமா உம்மால்?' என்று கேட்டார். அன்று சரியான கூட்டம்! அத்தனை பேரும் 'டிபிகல் குன்னக்குடி' கேட்க வந்தவர்கள். 'என்னடா, இவர் இப்படிக் கேட்டு விட்டாரே' என்று கொஞ்சம் தயக்கமாக இருந்தது. இருப்பினும் ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு அவர் கேட்டதை வாசித்தேன்... அவர் கேட்டபடியே! அவ்வளவுதான். அந்த இரு ராகங்கள் முடிந்ததும் சுப்புடு எழுந்து விட்டார். மிகவும் உணர்ச்சிவசப் பட்டவராக, 'இது போதும், வருகிறேன்' என்று போய்விட்டார். மறுநாள் தினமணியில் எழுதுகிறார்... 'குன்னக்குடியை இதுநாள் வரை முழுமையாகப் புரிந்து கொள்ளாதது என் தவறு...' இதற்கு என்ன சொல்கிறீர்கள்?"

**"போகட்டும். கச்சேரியின் நடுவே நீங்கள் செய்யும் அங்க சேஷ்டைகள் பற்றிச் சொல்லுங்கள். அதுவும் ஜனரஞ்சகம் கருதித்தானா?"**

"நிச்சயமாக. ஒரு சினிமா அல்லது நாடகம் எனில் 'மூவ்மெண்ட்' இருக்கும். ஒரே இடத்தில் உட்கார்ந்து பார்த்தாலும் போரடிக்காது. ஆனால் மேடைக்கச்சேரி அப்படி அல்ல. ரசிகர்களை ஆரம்பம் முதல் கடைசிவரை ஓர் உற்சாக நிலையில் வைத்திருக்கவே, என் முகபாவங்களை - பாடலின் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப மாற்றி மாற்றி, உற்சாகம் பற்ற வைக்கிறேன்."

**"திருவையாறு உற்சவத்தில் சுகன்யா பாடுவது போலப் படமெடுத்து வாங்கிக் கட்டிக் கொண்டீர்களே, என்ன ஆயிற்று அந்தப் படம்?"**

"அநாவசியமாக பிரச்னை கிளப்பிவிட்டு விட்டார்கள். நான் அதை சினிமா ஷூட்டிங் மாதிரியே எடுக்கவில்லை. வீடியோ கேமராக்கள் எத்தனையோ அங்கு படமெடுத்துக் கொண்டிருந்தன. அவற்றுள் ஒன்றாகத்தான்... ப்ச். விட்டு விடுங்கள். அந்தப் படமே 'டிராப்' ஆகி விட்டது."

**"நீங்கள் ஏன் உங்கள் சிஷ்யர்களை உருவாக்குவதில்லை? 'குன்னக்குடி சிஷ்யன்' என்று யாரும் வந்ததாகத் தெரியவில்லையே?"**

"நான் என்ன செய்யட்டும்? எனது பயிற்சித் திட்டம் கொஞ்சம் கஷ்டம். முதல் மூன்று வருடங்கள் மிகவும் சிரமப்பட வேண்டி இருக்கும். சாதகம் மிக அதிகம் தேவைப்படும். வருகிற ஒன்றிரண்டு பேரும் பயந்து ஓடி விடுகிறார்கள். ஆனால் எனக்கும் ஒரு சிஷ்ய பரம்பரை உருவாக்க ஆசை இருக்கத்தான் செய்கிறது. பார்க்கலாம்... மார்ச் '96 லிருந்து 'குன்னக்குடி சங்கீத குருகுலம்' என்று ஆரம்பிக்கிறேன் - சென்னையிலும் பெங்களூரிலுமாக."

**"உங்கள் மனைவிக்கு சங்கீதம் தெரியுமா?"**

"ரசிக்கத் தெரியும்!"

**"உங்கள் வி.ஐ.பி. சிஷ்யை பற்றி?"**

"யாரைச் சொல்கிறீர்கள்?"

**"இன்றைய முதல்வர் ஜெயலலிதா!"**

"ஓ! அதுவா? 1973-74 — ஒரு வருடம் அவருக்கு நான் வாய்ப்பாட்டு சொல்லிக் கொடுத்தேன். பிரமாதமாகப் பாடுவார். கர்நாடக இசையில் அவருக்கு அலாதியான ஆர்வம் உண்டு. தொடர்ந்து பயிற்சி பெற அவருக்கு நேரமில்லாமல் போய்விட்டது. இருந்திருந்தால் இசைத் துறையிலும் பிரமாதமாக வந்திருப்பார்!"

சந்திப்பு : **ஔரங்கசீப்**

படங்கள் :

**ராஜூநாராயண்**



# ஆடினால் ஆபத்தா?

டில்லி சஞ்சய் காந்தி மருத்துவமனையில் சீனியர் ஃபார்மஸிஸ்ட் வேலை பார்ப்பவர் கனகா சுதாகர். கலாக்ஷேத்திராவில் பரதநாட்டியமும் மாஸ்கோவில் பாலே நடனமும் பயின்றவர்.

அக்யுபிரஷர் நிபுணரான டாக்டர் ரமன் கபூருடன் சேர்ந்து நடனத்தினால் உண்டாகும் சில பயன்களைக் கண்டு பிடித்திருக்கிறார் கனகா.

"இந்திய நடனங்களில்தான் ஷூ போட்டுக் கொண்டு ஆடுவதில்லை. எனவே உள்ளங்காலின் பல பகுதிகள் தரையில் அழுத்தமாகத் தட்டப்படும் போது அக்யுபிரஷர் மருத்துவ முறையில் பலன்கள் நிறைய இருக்கின்றன" என்கிறார்.

கால் விரல்களின் மேற்பகுதி தட்டப்படும் போது மூளைக்கும்; நடுவிரல் பகுதிகள் தட்டப்படும் போது சைனஸ், டான்சில்ஸ் போன்ற உபாதைகள் வராது போகவும் உதவி கிடைக்கிறதாம். கட்டை விரலின் அடிப்பாகம் கண் பார்வைக்கும்; அதற்குக் கீழே நுரையீரலுக்கும்; வலது காலின் நடுப் பாதம் இதயத்துக்கும்; அதற்குக் கீழே சிறுநீரகத்துக்கும்; பிறகு லிவர், பிறகு ஜீரண உறுப்புக்கள் என்று – பாதம் தரையில் அழுத்தமாகத் தட்டப்படும்போதெல்லாம் உடலின் பல்வேறு பகுதிகள் பயன்பெறுகின்றனவாம். இதை ஒரு சீன அக்யுபிரஷர் ஸ்பெஷலிஸ்ட்டும் ஆமோதித்திருக்கிறார்.

"நானே நடன வகுப்பில் சேரும் போது கிட்டப் பார்வைக் கோளாறுக்காக மைனஸ் - 5 கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தேன். நாலைந்து வருடங்கள் கழித்து, கண் பார்வையை செக்அப் செய்து கொள்ளப் போன போதுதான் தெரிந்தது. 1.5 க்கு அது குறைந்து விட்டது என்று. இப்போது கண்ணாடி போடுவதில்லை நான்!" என்கிறார் கனகா சுதாகர்.

பரதநாட்டியத்தில் மூளைக்கு வேலை அதிகம். குறிப்பாக, தாளத்துக்குக் கட்டுப்பட்டு ஆட வேண்டும். எனவே, எப்போதும் உஷாராக இருக்க வேண்டியிருப்பதால் வேறு எந்தப் பயிற்சியை விடவும் இதில்தான் மூளை அலர்ட்டாக இருக்கிறது.

முதுகெலும்புக்கு ஆதாரமாக இருக்கும் தசைகள் உறுதியாக இருந்தால் முதுகுவலி வருவதில்லை. பரதநாட்டியத்தில் முதுகை ஸ்ட்ரெயிட்டாகத்தான் வைத்துக் கொள்ள வேண்டும். பக்கவாட்டில் வளையும் போது கூட முதுகை வளைக்க முடியாது. அதனால்



• புன்னகை மட்டுமே!



• பிரீத்திகா சாரி

முதுகெலும்பு ஊட்டம் பெறுகிறது.

வர்ணம் ஆடுகிற போது, தொடர்ந்து ஜதிக்கோர்வைகளின் போது நுரையீரலுக்கு நிறைய ஆக்ஸிஜன் கிடைக்கிறது. ஓர் ஓட்டப் பந்தய வீரர் கூட, ஓடி முடித்ததும் வாயால் பெருமூச்சு விட்டுக் கொண்டு, தரையில் உட்கார்ந்து விடலாம். ஆனால் மேடையில் ஆடும்போது, வாயைத் திறக்கக் கூட முடியாது. புன்னகை மட்டுமே செய்ய முடியும். வர்ணத்தில், ஜதிக் கோர்வை முடித்து, மெல்ல மெல்லப் பின் சென்று நிறுத்தும் போது, நாசி வழியே சீராக மூச்சு விட முடிகிறது. 'டீப் ப்ரீத்திங் அட் ரெஸ்ட்' என்ற இந்த நிலை பிராணாயாமம் போன்றது.

டாக்டர் பிரிதிகா சாரி, நாட்டியத்தால் சில நன்மைகள் - குறிப்பாக மனமகிழ்ச்சியான நிலை - இருப்பதை ஒப்புக் கொள்கிறார். "மன வளர்ச்சி குன்றிய ஸ்பாஸ்டிக் குழந்தைகளிடையே பரதநாட்டியம் குறிப்பிடத் தகுந்த அளவுக்கு மாற்றத்தை உண்டாக்கியிருப்பதாகப் பரிசோதனைகள் காண்பிக்கின்றன!" என்கிறார்.

"ஆனால், நாட்டியம் ஆடுவதில் வேறொரு ஆபத்து இருக்கிறதே!" என்கிறார் டாக்டர் கிருஷ்ணாராமன்.

"பாதத்தைத் தரையில் அடித்து நடனம் ஆடும்போது, திசுக்கள் பாதிக்கப்படுகின்றன. ஹை இம்பாக்ட் மூவ்மென்ட் காரணமாக, பாதத்தில் வீக்கம் கூட உண்டாகும். முழங்கால், கணுக்கால், பாதம் இவை முக்கியமாக பாதிப்புக்கு உள்ளாகின்றன. ஆர்த்ரைடிஸ் தொல்லை ஆரம்பமாகிறது. மெல்ல, நடு முதுகு கீழ் முதுகுப் பகுதிகள் வலி கொடுக்கத் தொடங்கும்."

"அப்படியானால் குணப்படுத்த முடியாதா, டாக்டர்?"

"குணப்படுத்தலாம். தகுந்த சிகிச்சையும் மருந்துகளும் கொடுத்துக் குணப்படுத்தலாம்."

"வேறு என்ன வழி?"

"ஆடும் முறையை மாற்றிக் கொள்ளலாம்."

"அது எப்படி?"

"பாதத்தை ஒரேயடியாக அடித்து ஆடாமல் மிருதுவாகத் தரையில் அடித்து ஆடலாம்..."

தம்மிடம் ட்ரீட்மென்ட்டுக்கு வரும் நாட்டியக் கலைஞர்களுக்கு இந்த அறிவுரையைத் தான் வழங்குகிறார் டாக்டர் கிருஷ்ணாராமன்!

- சித்தார்த்

# ஆழ்வாரா? ஆண்டவரா?

பகவானைக் காட்டிலும் பாகவதன் பெரியவன். அவனை வணங்கும் பரம பாகவதன் அவனினும் மேலானவன் என்று அடியார்க்கு அடியாரைக் கொண்டாடியவர் நம் முன்னோர்.

நம்மாழ்வார் தம்முடைய பாசுரத்தில் பெருமானைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார். "உன் திருமுகத்து ஒளிதான் மணி மகுடத்தில் வீசுகிறதா? திருவடியின் ஒளிதான் தாமரையாய் மலர்கிறதா?" என்ற பொருளில் "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ? அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?" என்று பாடினார்.

பொதுவாக இறைவனைப் பாடும்போது



பாதாதி கேசம் என்று திருவடி முதல் திருமுடி வரை பாடுவது மரபு. இங்கே நேர்மாறாகத் 'திருமுடி என்று தலையில் இருந்து பாதம் வரை ஆழ்வார் பாடியிருக்கிறாரே... நியாயமா' என்ற கேள்வி பிறந்தது. உரையாசிரியர் ஒரு போடு போட்டார். திருவடியில் இருந்து பாடத்தான் ஆழ்வார் நினைத்து தவம் இருந்தார். ஆனால் தவத்தில் இருந்து கண்ணைத் திறந்ததும் அவர் கண்ணில் பட்டது பகவானின் திருமுடி. வைரக் கிரீடம்... அதுவும் ஆழ்வார் பாதத் தருகே தெரிந்தது. ஆம். 'இத்தனை உத்தம பக்தன் வேறெங்கே உண்டு' என்று பகவான் ஆழ்வார் திருவடியில் திருமுடி வைத்து வணங்கியதால் முதலில் தெரிந்த திருமுடியில் இருந்தே பாடத் தொடங்கினார்.

இப்படி இறைவன் புகழைத் தூக்கிச் சாப்பிட்ட ஆழ்வார் புகழ், நகரின் பெயரையும் விழுங்கி - குருகூர் என்ற பழைய பெயரை ஆழ்வார் திருநகரி என்ற புதுப்பெயர் ஆக்கி விட்டது. ஆம்.... நாரை, கோழி, குருக்கத்தி ஆகிய பறவைகளைக் குறிக்கும் பெயர் குருகு. அத்தகு பட்சிகள் மிக்க ஊர் குருகூர். அவ்வூரில் காரியார் என்ற சிற்றரசருக்கும், உடைய நங்கைக்கும் திருமகனாய்த் தோன்றியவர் சடகோபர். 'குருகூர்ச் சடகோபன்' என்றே தம்மை அழைத்துக் கொள்வார்.

அவர் காலத்திற்குப் பிறகு, பறவைகள் புகழால் அமைந்த குருகூர் என்ற பெயர் மறைந்து ஆழ்வார் திருநகரி என்று ஆழ்வார் பெயரால் ஊருக்குப் புகழ் வந்து விட்டது! அது மட்டுமா! திருமாலை வணங்கி அவன் பெருமையில் ஆழங்கால் பட்ட பதினோரு ஆழ்வார்களுக்கு நிகராக, நம்மாழ்வாரைப் புகழ்ந்து அவரையே கடவுளாகப் பாடிய மதுரகவியாழ்வாரும் ஆழ்வார் எனப் பட்டார் என்றால் நம்மாழ்வார் புகழுக்கு எல்லையேது!

சிற்றரசர் மரபில் தோன்றிய சடகோபர் (நம்மாழ்வார்) குழந்தைப் பருவத்திலேயே வேறுபட்டு விளங்கினார். அழுதல், மகிழ்தல், ஆடல், அமுதுக்கு ஏங்கி அழைத்தல் என்கிற உலகக் குழந்தைகள் செயற்பாடு இன்றி அமைதியாக இருந்தார். பெற்றோருக்குப் பெரு வியப்பு... அவ்வூர்ப் பெருமானாகிய ஆதிநாதர் ஆலயத்துள் குழந்தையைக் கொண்டு சென்றனர். அங்கு ஓர் அதிசயம் நடந்தது!

அங்கிருந்த புளிய மரத்தின் பொந்தை நோக்கிப் பிள்ளை தவழ்ந்தது. உள்ளே புகுந்து உரிமையாக உட்கார்ந்து கொண்டது. உணவு, உறக்கம் என்கிற உலக மாயை அந்தக் குழவி

# “நாய்க்கு மோட்சம் தந்தாயே, இந்தப் பேய்க்குத் தரக்கூடாதா?”

ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம்! - 19

யைத் தீண்டவே இல்லை. பிள்ளைப் பருவத்தி லேயே 'சடம்' என்கிற உலக மாயையைக் கோபித்த காரணத்தால் சடகோபராக உலகம் அவரை மதிக்கத் தொடங்கியது. எந்தக் குறையும் இன்றி, பதினாறு ஆண்டுகள் வளர்ந்த பருவத்தினராய்ச் சடகோபர் புளிய மரத்தடியில் தவம் புரிந்தார்.

ஒரு குரு வேண்டும் என்ற ஏக்கத்துடன் வடநாட்டு யாத்திரை சென்றிருந்த மதுரகவி என்கிற அந்தணர், தென்திசையில் தெரிந்த ஒளிக்கீற்றைக் கண்டு தேடித் தேடி குருகூர் வந்தடைந்தார். மோனத்தில் இருந்த நம்மாழ்வாரைக் கண்டு வணங்கினார். அறிவு அவருள் ஐயத்தை எழுப்பியது. சோதித்துப் பார்த்து முடிவுக்கு வர நினைத்து, "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்றார். சடகோபர் விழி திறந்தார். அப்போதே மதுரகவியின் விழியையும் திறந்து வைத்தார். "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று பதில் வந்தது. செத்தது = ஜடமாகிய உலகு; அதன் வயிற்றில் பிறக்கும் உயிர் = சிறியது. அது என்ன செய்கிறது? உலகில் வளரும் பொருட்களை உண்டு அங்கேயே கிடக்கிறது என்ற பொருளில், 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்றார் நம்மாழ்வார். அது முதல்,

"இதுவோ திருநகரி; ஈதோ பொருநை
இதுவோ பரம பதத்து எல்லை.
இதுவோதான்
வேதம் பகிர்ந்திட்ட மெய்ப் பொருளின்
உட்பொருளை
ஓதும் சடகோபர் ஊர்"

என்று பல பக்த உள்ளங்களில் இடம் பெற்றது அந்தத் திருநகரி!

வடக்கே புத்தரால் புகழ் பெற்ற போதி மரத்தடி போலவே தெற்கே ஆழ்வாரால் புகழ் பெற்றது அந்தப் புளிய மரத்தடி... திருப்புளி ஆழ்வான் என்று மரமும் உயர்திணையாக உயர்வு பெற்றது... தவறு - உயர்வு பெற்றார்!

வேதம் தமிழ் செய்த வித்தகர், வகுள பூஷண பாஸ்கரர், உலகுய்யத் தோன்றிய குருநாதர் என்று புகழப் பெறும் நம்மாழ்வார், திருவாய் மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய திவ்ய பிரபந்தங்களை அருளி உலகை வாழ்வித்தார்.

ஆழ்வார் திருநகரி என்னும் இத்திருத்தலம், திருநெல்வேலி - திருச்செந்தூர் மார்க்கத்தில் உள்ளது. சோழ நாட்டில் காவிரிக் கரையில் திருவரங்கம் போலே பாண்டி நாட்டில் தாமிரபரணி (பொருநை) ஆற்றங்கரையில் இப்பதி அமைந்துள்ளது. திருவரங்கம் லோக வைகுந்தம் என்றால் குருகூர் - பரமபதம் என்பர் பெரியோர். பொருநைக் கரையில் உள்ள ஒன்பது திருமால் தலங்களை நவதிருப்பதிகள் என்பர். அதில் முதல் பதி இது.

இங்குள்ள இறைவர் திருநாமம் ஆதிநாதர். தாயார் ஆதிநாத வல்லி. பரமபதத்தில் பிரம்மா வணங்கிய போது தாம் ஆதியிலேயே உகந்த இடம் என திருமால் சுட்டிய பதி இது என்பதால், இப்பெருமாள் பெயர் ஆதிநாதர் என்பது தல வரலாறு.

"விளம்பும் அறுசமயமும் அவை ஆகியும்
மற்றும் தன்பால்
அளந்து காண்டற்கு அரியன் ஆகிய ஆதிப்
பிரான்"

என்று நம்மாழ்வார் அறு சமயத்தின் ஆதிப்பிரான் என்று சாதிக்கிறார்.

உற்சவ மூர்த்தியின் திருநாமம் 'பொலிந்து நின்ற பிரான்' என்பது. அவரைப் பாட வந்த நம்மாழ்வார், அவரை மட்டும் பாடாது திருக்குருகூர் செல்வ வளம், இயற்கை வளம் எல்லாம் அடங்குமாறு பாடினார். கோயிலைச் சுற்றியுள்ள வயல் பரப்பில் செந்நெல் விளைந்து நிற்கிறது. அடர்த்தியாகச் சூல்பிடித்த செந்நெல் கதிர்கள் காற்று வீசும் போது குனிந்து தரையைத் தொட்டு நிமிருகின்றன. பெரும் வயல் பரப்பில் காற்றடிக்கும் போது வயல் நிரம்பிய செந்நெல் அலை 'அலையாகக் குனிந்து நிமிருவது கண் கொள்ளாக் காட்சி. அது எப்படி இருக்கிறதாம்? 'பொலிந்து நின்ற பிரானாகிய' திருமாலுக்கு, அரசருக்கு, பூமியாகிய பெண் கவரி வீசுவது போல் இருந்ததாம்.

**சுகி சிவம்**

"மலிந்து செந்நெல் கவரி வீசும்
திருக்குருகூர் அதனுள்
பொலிந்து நின்ற பிரான் கண்டீர்
ஒன்றும் பொய்யில்லை போற்றுமினே"

என்று செந்நெல் கவரி வீசும் அழகையும் பாடினார் ஆழ்வார். பொலிந்து நின்ற பிரான் அருகே பூதேவி, ஸ்ரீதேவி, நீளாதேவி மூவரும் நிற்கிறார்கள்.

இங்கு வராகநாராயணர், ஞானப்பிரானாக முனிவர்களுக்குக் காட்சி கொடுக்கிறார். எல்லாவற்றையும் விட நம்மாழ்வார் சந்நிதியே இங்கு மிகச் சிறப்பு. உறங்காப்புளி என அழைக்கப் படும் புளிய மரம், ஏழு கிளைகளோடு அடர்ந்த பரப்புடையது. ஆழ்வார் வாழ்ந்த அப்புளியின் அடியிலேயே பள்ளிப்படுத்தி அவர் பூத உடல் வைக்கப் பட்டுள்ளது. இப்புளிய மரம் பற்றி விசேஷ வசனம் ஒன்று உண்டு. 'பொந்தாயிரம் புளி ஆயிரம்' என்றபடி பல பொந்துகள் உடையது இம்மரம். இங்கு இருந்த கோலத்தில் நம்மாழ்வார் அருள் பாலிக்கின்றார்.

**ப**ல்வேறு திருமால் திருக்கோவில்களில் நம்மாழ்வார் சிலை வடிவிலும், செப்புத் திரு மேனியிலும் காட்சி கொடுக்கிறார் என்றாலும், அங்கெல்லாம் இரு கை கூப்பி வணங்கிய நிலையில் இருப்பார். இங்கோ உபதேசிக்கும் ஞான முத்திரையோடு விளங்குகிறார் என்பது கூர்ந்து நோக்கி இன்புற வேண்டிய விஷயம்.

வைணவம் வாழத் தோன்றிய மணவாள மாமுனிகள் அவதாரத்தலம் ஆழ்வார் திருநகரி என்பது தலத்தின் இன்னொரு பெருமை. இந்தக் குருகூர் வீதிகளில் எச்சிலை உண்டு வாழ்ந்த நாய் ஒன்று மோட்சம் போனதாக ஒரு கதை உண்டு. அமரர் பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் இக்கதை குறித்த கவிதையைத் தம் சொற்பொழிவுகளில் சொல்வது உண்டு. "நாய்க்கு மோட்சம் தந்தாயே.. இந்தப் பேய்க் குத் தரக்கூடாதா?" என்று பாட வந்த புலவர், "நம்மாழ்வார் பாட்டுக்கு, மகுடம் சாய்க்கும் பெருமானே" என்று பெருமானை வேண்டாது, 'பெருமாள் மகுடம் சாய்க்கும் படி கவி சொல் லும் கருணைக் கடலே' என்று நம்மாழ்வாரை வேண்டி, பெருமாளை விடவும் நம்மாழ்வார் வரந்தருவார் என்று புரிய வைத்தார்!

வாய்க்கும் குருகைத் திருவீதி எச்சிலை வாரி உண்ட
நாய்க்கும் பரமபதம் அளித்தாய் அந்த நாயோடு இந்தப்
பேய்க்கும் பதம் அளித்தால் பழுதோ? பெருமான் மகுடம்
சாய்க்கும்படிக் கவி சொல்லும் ஞானத் தமிழ்க் கடலே!"

என்பது பாட்டு.

(தொடரும்)

நேர்முகப் பயிற்சியும் உண்டு. பெண்களுக்கு தனி வகுப்புகள்

## விவேகானந்தாவின் " ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸ் " விவரம்

**LEVEL-1**

**(அடிப்படை ஆங்கிலம்)** ABCD யிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை எழுத, படிக்க எளிய முறையில் பயிற்சி பெறலாம் கட்டணம் ரூ. **110/-** மட்டுமே

**LEVEL-2**

**(இலக்கணப்பயிற்சி)** ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டு, பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத முறையான பயிற்சி பெறலாம் கட்டணம் ரூ. **140/-** மட்டுமே.

**LEVEL- 3**

**(ஸ்போக்கன் இங்கிலீஷ்)** எந்தச்சூழ்நிலையாக இருந்தாலும் தயக்கமின்றிச் சரளமாகப் பேச நவீன முறையில் பயிற்சி பெறலாம். கட்டணம் ரூ. **170/-** மட்டுமே

**SPECIAL OFFER**

**LEVEL- 2&3** இரண்டு பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. **270/-** மட்டும் செலுத்தினால் போதும்.

**LEVEL- 1,2&3** மூன்று பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. **350/-** மட்டும் செலுத்தினால் போதும்.

**முன்பணம் அனுப்பத் தேவையில்லை. பாடங்களை V.P.P யில் அனுப்புகிறோம்.**

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள்.

KLK



**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, NATESAN STREET, T.NAGAR, MADRAS-600 017.

நான் விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸில் சேரவிரும்புகிறேன், பாடங்களை V.P.P. யில் அனுப்புங்கள் (தேவையான கட்டத்தில் ✔ குறியிடவும்)

- ☐ LEVEL-1 பாடங்களை அனுப்புங்கள் ரூ. 110/- செலுத்திப் பெற்றுக்கொள்கிறேன்
- ☐ LEVEL-2 பாடங்களை அனுப்புங்கள் ரூ. 140/- செலுத்திப் பெற்றுக்கொள்கிறேன்
- ☐ LEVEL-3 பாடங்களை அனுப்புங்கள் ரூ. 170/- செலுத்திப் பெற்றுக்கொள்கிறேன்
- ☐ LEVEL-2 & 3 பாடங்களை அனுப்புங்கள் ரூ. 270/- செலுத்திப் பெற்றுக்கொள்கிறேன்
- ☐ LEVEL-1,2 & 3 பாடங்களை அனுப்புங்கள் ரூ. 350/- செலுத்திப் பெற்றுக்கொள்கிறேன்

பெயர்..........................................................

முகவரி..........................................................

..........................................................

..........................................................PIN : ☐☐☐☐☐☐

**ஜெயந்தி, காயத்ரி** : ஹாய் மாலா! கங்கிராட்ஸ் கலைமாமணி!

**மாலா** : தாங்க்ஸ்! உன்னைக் கூட கங்கிராஜுலேட் பண்ணணுமே ஜெயந்தி - யுவகலா பாரதி பட்டம் வாங்கறே இல்ல...

**ஜெயந்தி** : ஆமாம். காய்த்ரிக்கும் சீக்கிரமே இந்த பட்டமெல்லாம் கிடைச்சுடும்...

**மாலா** : இந்த சின்ன வயசுலயே ஆல் இண்டியா ரேடியோல 'ஏ கிரேட்' கிடைச்சிருக்கே அவளுக்கு... அதுவே பெரிய விஷயமில்லையா...

**காயத்ரி** : நீங்க இரண்டு பேரும் லால்குடி விஜயலஷ்மியோட வீணா-வேணு- வயலின் கச்சேரிக்கு பம்பாய் வந்த போது பார்த்திருக்கேன்... அந்தக் கச்சேரியை ரொம்ப ரசிச்சேன். மூணு பெண்கள் தனியா பயணம் பண்ணி... பல ஊர்களுக்குப் போய் கச்சேரி பண்ணறது ரொம்ப சுவாரஸ்யமான அனுபவமா இருந்திருக்குமே....

**ஜெயந்தி** : ஆமாம்! ஆரம்பத்துல எங்களோட துணைக்குப் பெரியம்மா வருவாங்க. (ஜெயந்தியின் பெரியம்மா வீணைக் கலைஞர் பத்மாவதி) அப்புறம் போகப் போக நாங்களே தனியா பயணம் செய்தோம். மாலாவுக்குப் பிரச்னையே இல்லை. வாத்தியம் கைக்கு அடக்கமா இருக்கும். விஜியுடைய வயலின் பெட்டியும் பரவாயில்லை... ஆனால் என் வீணையை ரயில்ல எடுத்துண்டு போகறது தான் பெரிய பிரச்னை. அதுக்குத் தனி berth கேட்டால் கிடைக்காது. அதனால 'வீணா - வயது 22' அப்படின்னு ஒரு பேர்ல டிக்கெட் வாங்கிடுவேன். டிக்கெட் செக்கிங்குக்கு வர போது மனுஷனுக்கே இடமில்லை; நீ வாத்தியத்துக்கு berth கேட்கறியே' அப்படின்னு ரகளை கிளம்பும். நமக்கு நம்ம வாத்தியம் மனிதர்களைப் போலவே முக்கியமானதுன்னு எப்படிப் புரிய வைக்கிறது! இப்பல்லாம் வீணையைப் பக்கத்தில் வைச்சுண்டு அதே berth இல் தூங்கப் பழகிட்டேன்....

**மாலா** : அந்த நாட்களை நான் ரொம்ப மிஸ் பண்றேன்




சிக்கில் மாலா சந்திரசேகர் (புல்லாங்குழல்), ஜெயந்தி (வீணை), பம்பாய் காயத்ரி (வயலின்) ஆகிய மூவரும் ஒரு மாறுதலுக்காக இணைந்து நடத்தும் அரட்டைக் கச்சேரி.

# “சினிமாப்பாட்டு வாசிச்சா ஆட்டோகிராஃப் கேக்கறாங்க!”



ஜெயந்தி... நம்ம மூணு பேருக்கும் அவரவ ரோட தனி பாணி செட் ஆனதுக்கப்புறம் அதுமாதிரி சேர்ந்து கச்சேரி பண்ண முடியா மல் போயிடுத்து இல்ல....

**ஜெயந்தி :** ஆமாம். அந்த டூர்கள்ல நீ என்னை எப்படியெல்லாம் கவனிச்சு உதவி பண்ணியிருக்க. அப்பவெல்லாம் எனக்குத் தலை பின்னிக்கக் கூட தெரியாது.

**காயத்ரி :** நீங்க சொல்றதெல்லாம் ரொம்ப நல்லாயிருக்கு..... ஒரு பெண் வயலின் கலைஞரா இருக்கிறதுனால எனக்குப் பயண வாய்ப்புகள் ரொம்ப குறைஞ்சு போயிடுது. வெளி ஊர்களுக்குப் போகிற ஆண் கலைஞர்கள் பெண்களை அழைச் கட்டுப் போகறதை அவ்வளவா விரும்பற தில்லை... தவிர, பெண்கள் பக்கவாத்தியம் வாசிக்கக்கூடாதுன்னு நினைக்கறவங்களும் இருக்காங்க....

**மாலா :** இப்ப கூடவா...? ஒரு காலத்துல அப்படி இருந்தது தெரியும்.

**ஜெயந்தி :** நம்மை மாதிரி இளைய தலை முறையைச் சேர்ந்தவங்க கூடவா அப்படி நினைக்கறாங்க...? ஆச்சரியமாயிருக்கே!

**காயத்ரி :** நான் நிறைய தடவை அந்தச் சங்கடத்தை அனுபவிச்சாச்சு.

**மாலா :** இது ரொம்ப மோசமான நிலைமை... என் கச்சேரிகளுக்குப் பக்கவாத் தியம் வாசிக்க, கூடிய வரையிலும் நிறைய பேருக்கு மாற்றி மாற்றி வாய்ப்புக் கொடுக்க முயற்சி பண்ணுவேன். ஆண், பெண்ணுன் னெல்லாம் வித்தியாசம் பார்க்கிற தில்லை....

**காயத்ரி :** நீங்க இரண்டு பேருமே நிறைய டூர் போறீங்க... எப்படிச் சமாளிக்க முடி யறது...?

**ஜெயந்தி :** பழகிட்டா அவ்வளவு கஷ்டம் தெரியாது. இரண்டு - மூணு மாசம் வெளி நாட்டுக்குப் போய் வரும்போதுதான் கஷ்டமா யிருக்கும். திரும்ப வந்து, விட்டுப் போன வேலைகளையும் வீட்டையும் குடும்பத்தையும் கவனிக்கறது மலைப்பா இருக்கும்.

**மாலா :** வெளிநாடுகள்ல வாத்தியக் கச்சே ரிக்கு நல்ல வரவேற்புன்னு நீ சொல்லியிருக்கே ஜெயந்தி. ஆனா இங்க நம்ம இன்ஸ்ட்ரு மெண்ட் கலைஞரா இருக்கறதாலேயே வாய்ப்பு குறைஞ்சுடுது. ஒரு சீசன்ல ஒரு சபாவில் இரண்டு, மூணு வாத்தியக் கச்சேரிதான் வைக்க முடியுது. அது எந்த வாத்தியம், அந்த வாத்தியத்துக்கு எந்தக் கலைஞர்னு சபா செக்ர டரி வடிகட்டி முடிவு செய்ய வேண்டி யிருக்கு....

**ஜெயந்தி :** ரொம்ப கரெக்ட்! வாத் தியக் கலைஞர்கள் என்கிறதால நாம் கச்சேரிகளில் ரொம்ப கவனமா, எல்லாருக்கும் தெரிஞ்ச பிரபலமான பாட்டுகள் வாசிக்க வேண்டியதும் கட்டாயமாயிடுறது.

**மாலா :** இல்லைன்னா, 'இது என்ன பாட்டு...?' என்கிற யோசனையிலேயே ரசிகர் கள் இருக்க... நாம அந்தப் பாட்டை வாசிச்சே முடிச்சுடுவோம்! அதனால மைக்ல அறிவிச் சுட்டு வாசிக்கற பழக்கம் ஏற்படுத்தியிருக் கோம்.

**காயத்ரி :** அதுக்காக, புதுப் பாட்டுகளே வாசிக்காம இருந்தாலும் அலுப்புத் தட்டும். கவனமா தேர்ந்தெடுத்துக்கணும்.

**ஜெயந்தி :** காயத்ரி, உன் அக்கா நந்தினி யோட சேர்ந்து தனிக் கச்சேரி தவிர பக்கவாத் தியமாகவும் நீ வாசிக்கறயே... சில நேரங்கள்ல

## 'சுருக்-நறுக்' – 6 போட்டி முடிவுகள்

**கீழ்க்கண்ட சொல்லோவியங்கள் ரூ. 50/- பரிசு பெறுகின்றன.**

# கவிதை என்பது...

● அறிவுக் கழனியில் அறுவடைக்குக் காத்திருக்கும் உணர்வுக் கதிர்மணிகள்.

– இரா. ராமசாமி, திருவண்ணாமலை.

● மனக்கண்ணில் படம்பிடித்து, வார்த்தை மழையில் கழுவப்பட்டு, வெளிவந்து உருக வைக்கும் புகைப்படம். எழுதுபவரின் மனப் படம்.

– இரா. உமா, சென்னை – 28.

● கவிதை ஒரு சைக்கிள். நான்கு முறை தள்ளினால் குரங்கு பெடலாவது போட்டு விடலாம். கொஞ்சம் கூடுதல் முயற்சியில் பேலன்ஸ் பிடிபட்டுவிடும். வித்தை காட்டுவது சிலருக்கே வசப்படும்.

– தி. மா. சரவணன், திருச்சி – 21.

● கவிஞன் வடிக்கும் பிள்ளையார் சிலை. பல நேரம் குரங்காய் முடிவது.

– வெ. ஆசைத்தம்பி, தஞ்சை – 1.

● அருவியாகக் கொட்டும் உணர்வுகளை குங்குமச் சிமிழில் அடைக்கிற சாமர்த்தியம்.

– ராஜ்கோகுல், திருச்சி – 20.

● கலைவாணியாகத் தோன்றி, பிரபு தேவாவாக மாறி வருவது.

– கோ. ஜெயபால், சென்னை – 6.

● பொய் சொன்னால் தண்டனை என்ற சட்டத்துக்கு ஒரு விதிவிலக்கு.

– ச. ராஜகுரு, திருப்பராய்த்துறை.

● உரைநடையின் பெண்பால்.

– வி. பி. மகராசி, மதுரை – 16.

● பிறந்த குழந்தையின் முதல் அழுகை.

– ஆ. பிரபு, கோவில்பட்டி.

● நவரசப் பெருக்கின் நளின வெளிப்பாடு. மூளையில் கருவாகி, மனதில் உருவாகி, முகிழ்க்கும் எழுத்து மலர்க் கொத்து!

– ஞா. ஞானமுத்து, சென்னை – 28.

மெயின் ஆர்டிஸ்ட் ரசிகர்களோட எதிர்பார்ப்பைப் புரிஞ்சுக்காம ஒரு டிராக்குல போனா, உன் வாசிப்புனால நிலைமையைச் சரி பண்ண முடியுமா?

**காயத்ரி :** அது ரொம்ப கஷ்டம். பிரதான கலைஞரைப் பின்பற்றித்தான் நாங்க வாசிக்க முடியும். அவங்க ஒரு போக்குல போகும் போது நாங்க எப்படி ஒட்டாம வேற திசைல போகறது...?

**மாலா :** அப்போ, மெயின் ஆர்டிஸ்டைத் திருப்தி படுத்தற மாதிரி வாசிக்கறதுதான் முக்கியம்...?

**காயத்ரி :** ஆமாம், அதே சமயத்துல ரசிகர்களையும் திருப்திப்படுத்தணும்.

**ஜெயந்தி :** சரி, உனக்கு மறக்க முடியாத கச்சேரின்னு எதைச் சொல்லுவே...?

**காயத்ரி :** பாம்பேல, அக்கா நந்தினியோட வாசிச்ச வயலின் டூயட்தான்... பெரிய கூட்டம்னு கிடையாது. ஆனா ரொம்ப திருப்தியா அமைஞ்சது.

**ஜெயந்தி :** எப்பவுமே அதிகக் கூட்டம் இல்லாத Chamber music மாதிரியான கச்சேரிகள்ல நம்மளை இன்னும் சிறப்பா வெளிப் படுத்திக்க முடியறது இல்லையா...?

**மாலா :** பெரிய கூட்டங்கள்ல கச்சேரியை வேற மாதிரி அமைச்சுக்கணும். ரசிகர்களோட ரியாக்ஷனை கவனிச்சுண்டே இருக்கணும். அதுக்கு ஏற்ற மாதிரி கச்சேரியைக் கொண்டு போகணும்... சில சபாக்கள்ல இதைப் புரிஞ்சுக்காம அரங்க விளக்கை அணைச்சுட்டு நமக்கு மட்டும் லைட்டை போகஸ் பண்றாங்க... இப்ப ரசிகர்கள் முகமே நமக்குத் தெரியாம போயிடுது! ஜெயந்தி, நீ சொல்லு... உனக்கு மறக்க முடியாத கச்சேரி எது...?

**ஜெயந்தி :** போன வருஷம் ஒரு கச்சேரியில முழுக்க முழுக்க கல்யாணி ராகமே வாசிச்சேன். 'சரஸ்வதி' சபா ஏற்பாடு. அலுப்பு ஏற்படாம மூணு மணி நேரம் ஒரே ராகத்துல பல்வேறு கீர்த்தனைகள் வாசிக்க அந்த ராகத்தோட அகல, நீள, ஆழத்தை எடுத்துக் காட்டணும். வயலின் பக்க வாத்தியம் வைச்சுக்கக் கூடாது, ராகம் - தானம் - பல்லவி வாசிக்கக் கூடாது... ரொம்பப் பெரிய சவாலா இருந்தது... நீ எந்தக் கச்சேரியைக் குறிப்பிட்டுச் சொல்லுவே மாலா...?

**மாலா :** கச்சேரி என்னைப் பொறுத்த வரைக்கும் சுமாராதான் அமைஞ்சதுன்னு சொல்லுவேன். ஹரிதாஸ்கிரி சுவாமிகள்

நடத்திய சீரீஸ் அது. எனக்கு ரொம்ப உடம்பு சரியில்லாம போய் ஹாஸ்பிடலில் இருந்தேன். வாசிக்க முடியுமான்னு சந்தேகமாவே இருந்தது. எப்படியும் வாசிச்சே ஆகறதுன்னு தீர்மானம் பண்ணி ரொம்பக் கஷ்டப்பட்டு கச்சேரியை முடிச்சேன். அந்தக் கச்சேரி வாசிச்சதுக்கு சிறந்த கலைஞர் விருது எனக்குக் கிடைச்சது. அவர்களுடைய தேர்வு முறைப்படி குலுக்கலில் சுதா ரகுநாதனுடைய பிள்ளையைவிட்டு சீட்டு எடுக்கச் சொன்னார்கள். கொஞ்சமும் எதிர்பார்க்காம என் பெயர் வந்தது. நான் எவ்வளவு கஷ்டப்பட்டு அந்தக் கச்சேரி செய்தேன்னு எல்லோருக்குமே தெரிந்திருந்ததால எல்லாருமே உணர்ச்சிவசப்பட்டு, கை தட்டினார்கள். எனக்கும் ரொம்ப நெகிழ்ச்சியாய் போயிடுத்து. சுவாமி ஹரிதாஸ் கிரி அப்போ மனம் நிறைஞ்சு ஆசிர்வாதம் பண்ணினார்.

*(சிறிது நேரம் மூவருமே அமைதியாகி விட மாலா மீண்டும் கலகலப்பை ஏற்படுத்தும் முயற்சியில் பேசினார்)* : ஜெயந்தி, உனக்குத் தெரியுமா... காயத்ரி சினிமா பாட்டையெல்லாம் பிரமாதமா வயலின்ல வாசிப்பா...

**ஜெயந்தி** : சினிமாப் பாட்டு சாகித்ய சுத்தமா பாடக்கூட செய்வாளே.. என் கூட டூர் வர்றப்போ கேட்டிருக்கேன்.

**காயத்ரி** : காலேஜ்ல நாங்க நாலஞ்சு பெண்கள் சேர்ந்து ஒரு மியூசிக் குருப் வைச்சிருக்கோம். போட்டிகள்ல நிறைய பரிசு வாங்கியிருக்கோம். ரொம்ப வேடிக்கை என்ன தெரியுமா...? இதுல நிறைய பணம் கிடைக்கிறது! இரண்டாயிரம், மூவாயிரம் ரூபாய் பரிசுத் தொகை! போதாக் குறைக்கு ரொம்ப சிம்பிளான அந்த பேக் கிரவுண்ட் மியூசிக்கை வாசிக்கறதுக்கு நமக்கு ஏகப்பட்ட பாராட்டு! கச்சேரிகள்ல நாம ரொம்ப கஷ்டப்பட்டு வாசிக்கிற சில விஷயங்களுக்கு ரியாக்ஷனே இருக்காது. ஆனா ஒரு காலேஜ் கல்சுரல் மீட்டுக்குப் போய் சினிமா பாட்டு வாசிச்சுட்டு மேடையை விட்டு இறங்கினா ஆட்டோகிராஃப் கேட்கிறாங்க! ஆரம்பத்தில் இது எனக்கு ரொம்ப ஆச்சரியமாயிருக்கும். எதுக்கு என் ஆட்டோகிராஃப்னு கேட்டேன். இப்பல்லாம் பழகிப் போச்சு. 'ஓ, ஒய் நாட்'னு ரொம்ப காஷுவலா போட்டுக் கொடுத்துடறேன்!

*(மூவரும் பெரிதாகச் சிரிக்கிறார்கள்)*

தொகுப்பு : **பத்மா**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**

**'சுருக் நறுக்' என்றொரு சொல்லோவியம் - 9**

# அதிர்ஷ்டம் என்பது....

'எப்போதாவது கதவைத் தட்டும். ஆனால் அது தட்டுகிற நேரத்தில் பெரும்பாலும் நாம் வீட்டில் இருப்பதில்லை' என்று ஒரு சொலவடை சொல்வார்கள். போகட்டும். 'அதிர்ஷ்டம்' பற்றி நீங்கள் ஒரு சொல்லோவியம் தீட்டி, கூப்பனில் நிரப்பி, 18.12.95க்குள் அனுப்பி வையுங்கள்.

பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியமும் ரூ. 50/- பரிசு பெறும். 26 வாரப் போட்டியில் அதிக முறை பரிசு பெறும் ஒரு திறமைசாலிக்கு ஒரு மெகா பரிசு காத்திருக்கிறது!

போட்டி முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

— ஆர்

அதிர்ஷ்டம் என்பது ..............................

..............................................................

..............................................................

..............................................................

..............................................................

பெயர் : ..................................................

முகவரி : ................................................

..............................................................

..............................................................

..............................................................

# ஜெயில் கம்பிகளை ஏன் விட்டீர்?

✉ புரியாத டப்பாங்கூத்து பாட்டு காசெட் உற்பத்தி பண்ணும் சுரேஷ்பீட்டர்சுக்கு அட்டைப் படம், விலாவாரியாக விமர்சனம். மத்திய மாநில அரசுகளிடமிருந்து கால்காசு பெறாமல், ஸ்ரீ சத்ய சாயி ட்ரஸ்ட் 220 கோடியில் 1000 கிராமங்களுக்கு குடிநீர் வழங்கியது உமக்கு கால் பக்கம் நியூஸ் தானா?
திருநெல்வேலி, பி. எஸ். ஈஸ்வரன்.

✉ சுரேஷ் பீட்டர்ஸின் பேட்டியைப் படித்தேன். மகிழ்ந்தேன். "இசையை ரசிக்கும் போது பாடுபவனும் கேட்பவனும் அங்கே மொழி கடந்த உணர்வில் ஒன்றிட வேண்டு"மென்ற ரசிப்புக் கலைத் தன்மை பற்றியும், "கம்போஸ் செய்தவுடன் முதலில் மனைவிக்குத்தான் பாடிக் காட்டுவேன்" என்று மனைவிக்கு முதலிடம் தரும் பெருந்தன்மையும் வெளிப்பட அமைந்திருந்தது பேட்டி. இதுபோன்ற இளைய தலைமுறையின் புதுமைப் பேட்டிகளை வெளியிடும் கல்கி வாழ்க!
சென்னை, ஏ. ராஜு.

✉ அரசு நிறுவனங்கள் நஷ்டத்தில் இயங்குவதற்கான காரணத்தைத் தலையங்கம் அருமையாக சித்திரித்தது. என்று தட்டிக் கேட்கும் துணிவும் தவறுகளைப் பகுத்தறியும் அறிவும் பாட்டாளிக்கு வருகிறதோ அன்றுதான் நிர்வாகம் சீர்பெறும்.
புள்ளபூதங்குடி, பூங்குழலி.

✉ நாகலை இளவலின் பஞ்சாயத்து சின்னங்களின் வரிசை நல்ல கற்பனை. கடைசி சின்னமாக ஜெயில் கம்பிகளைக் காட்டியிருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.
எண்ணூர், எம். பச்சைக்கனி.

✉ பத்திரிகை தர்மம் எவ்வளவு சீர்குலைந்து வருகிறது என்பதை எஸ். பாலகுமார் தன் 'க்ரைம் ரிப்போர்ட்டர்' கதையில் நன்றாகச் சித்திரித்துள்ளார். ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.
பரமக்குடி, எஸ். விஜிபாய்.

✉ 'லஞ்சம்' கவிதையை ரசித்தேன். 'துணிவுக்கு இங்கேன் பஞ்சம்?' என்று நானும் 3 ஆண்டுகளுக்கு முன், நகராட்சி சிறப்பு அதிகாரி (Special Officer)களுக்கு 'லஞ்சம் தர மாட்டேன்' என்று வீம்பு செய்தேன். பிற டாக்டர்கள் ஊரோடு ஒத்துப் போய் லஞ்சம் கொடுத்தார்கள். அவர்களுக்கு எல்லாம் வீட்டு வரி சுமார் ரூ. 500/- எனக்கோ ரூ 3000! துணிவுக்கு மறுபெயர் முட்டாள்தனம் தானோ?
(கோரிக்கையின் பேரில் ஊர், பெயர் தரப் படவில்லை)

✉ "மதி தன்னை மிக தெளிவு செய்து" என்ற போட்டிக் கதை இடஒதுக்கீட்டுப் பிரச்னையை வித்தியாசமான முறையில் அணுகி இருந்தது சிறப்பு. கண்ணொன்று தகிக்காத இளவெயில் போல இதமான கற்பனை.
வேலூர் – 7, பா. வை. சுவாமிநாதன்.

✉ ஆர்.எம்.வீ.யின் பேட்டி அவரின் மனத் தெளிவை எடுத்துக்காட்டியது. ரஜினியை வைத்து அராஜக ஆட்சியை வீழ்த்திக் காட்டுவார் என்ற நம்பிக்கை பேட்டியில் தெரிகிறது. பொறுத்திருந்து பார்ப்போம்!
தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ 'மணியார்டரில் நடந்த இல்லுமுல்லு' படித்ததும் திகில் நாவலைப் படித்ததைப் போல் உறையவைத்தது.
கோட்டையூர், தஞ்சை கலைவாணர்தாசன்.

## ரூ. 20 பரிசு பெறும் கடிதங்கள்

✉ "உண்மையான உழைப்பைக் காட்டினால் எந்த மாணவரையும் நல்ல மார்க் வாங்க வைக்கலாம்" என்ற ஸ்ரீமதி (26.11.95 கல்கி) அவர்களின் கருத்து உண்மைதான். ஆனால் இன்றைய நிலையில் இதை ஏன் பள்ளி/ கல்லூரி வகுப்புகளில் செய்ய வைக்க இயலவில்லை? அரசும் பள்ளிகளும் பெற்றோர்களும் ஏன் இதற்கு முயலவில்லை என்பதைப் பற்றியெல்லாம் சிந்திப்பது அநாவசியமாகிப் போய், ஒருபுறம் பள்ளிக்கு போய்க் கொண்டே மறுபுறம் 3 முதல் 4 மணி நேரம் டியூஷனுக்கும் போனால்தான் உயர்ந்த மதிப்பெண் பெற முடியும் என்ற போக்கு வளர்வது எதிர்காலக் கல்விச் சூழலுக்கு உகந்தது தானா?
பெரம்பலூர், சி. செல்வராஜ்.

✉ தேர்வு நிலையில் தொய்வு எய்தியுள்ள மாணாக்கர்களுக்குப் பள்ளியிலேயே இலவசமாகக் கூடுதல் போதனையளித்து, தனிப் போதனையின் மாண்பினை உயர்த்துவதே சாலச் சிறந்ததாகும்.
நீடாமங்கலம், நீ. க. பத்மநாபன்.

